க்ரைம் நாவல்

இந்தியாவிலேயே அதிகமாக விற்பனையாகும் தமிழ் மாத நாவல்

# தூக்கு மரப் பூக்கள்



# தூக்குமரப் பூக்கள்

## — ராஜேஷ்குமா

## 1

விஷ்ணுவை டெலிபோன் சத்தம் கலைத்த போ விடியற்காலை ஐந்துமணி. போர்வையோடு எழுந்து உ கார்ந்து ரிஸீவரை எடுத்தான்.

''ஹ....ஹலோ...''

''விஷ்ணு...! நான் சேவியர் ப்ரான்ஸிஸ் பேசறேன். ரெ யாயிட்டீங்களா...?''

மறுமுனையில் ஜெயில் வார்டன் சேவியர் பிரான்ஸி தன் கனமான குரலில் கேட்டார்.

விஷ்ணுவுக்கு தூக்கக் கலக்கம்.

''ரெடியாகணுமா...? எதுக்கு...?''

''மறந்துட்டீங்க போலிருக்கு...''

''எதை...?''

''இன்னிக்கு தேதி எவ்வளவு...?

''இருபத்தியாறு...'' சுவரில் மாட்டியிருந்த காலண் ரைப் பார்த்துக் கொண்டே சொன்னான் விஷ்ணு.

''அது நேற்றைய தேதி... இன்னிக்கு தேதி இருபத் யேழு. அந்த ரெண்டு பெண்கள்ல ஒருத்தியை இன்னிக் தூக்குல போடப்போறதா போன வாரம் உங்ககிட்டே சொ னபோது... தூக்கு தண்டனை நிறைவேத்தறதை நானும் இ னும் பார்த்ததில்லை. பார்க்க வரலாமான்னு கேட்டீங் ளே...?''

''ஆ...ஆமா...''

''வர்றீங்களா...?''

விஷ்ணுவின் கண்களில் இருந்த அத்தனை மொத்த தூ க்கலக்கமும் சரேலென்று காணாமல் போய்விட - போ வையை உதறினான்.

''அது... இ...இன்னிக்கா... ஸார்...?''

''ஆமா....''

விஷ்ணுவுக்கு அட்ரினலின் ஏகமாய் சுரக்க அதுஉடனே ரத்தத்தில் கலக்க - வயிற்றுக்குள் இனம்புரியாத ஒரு சங்கடம்

''என்ன விஷ்ணு... பேச்சையே காணோம்...! பயந்துட்டீங்களா?''

''ப... பயமா... எ... எனக்கென்ன பயம்...?''

''அப்ப... வந்துடறீங்களா...?''

''எ... எத்தனை மணிக்கு வரணும்...?''

''5.55-க்கு தூக்குல போட்டுடுவோம்... அஞ்சரை மணிக்குள்ளே ஜெயில் கேம்பஸுக்குள்ளே வந்துடுங்க...''

''ச...சரி...''

''என்ன குரல்ல நடுக்கம்...?''

''இல்லையே... கு....குளிர்...''

''அஞ்சரை மணிக்குள்ளே வந்துடணும்... நான் செண்ட்ரிகிட்டே சொல்லி வெச்சுடறேன்...''

''ம்....''

விஷ்ணு ரிஸீவரை வைத்துவிட்டு - இரண்டு நிமிஷங்கள் வரை அப்படியே உட்கார்ந்திருந்தான்.

'தூக்குதண்டனை நிறைவேத்தறதை ஒரு நாளைக்கு பார்க்க வேண்டும். சமீபத்தில் யாரையாவது தூக்கில் போடுவதாக இருந்தால் எனக்கு சொல்லுங்கள் என்று ஜெயில் வார்டன் சேவியர் ப்ரான்ஸிஸிடம் சொன்னது பெரிய தப்பு.'

'போகலாமா... வேண்டாமா...?'

'போகாமல் இருந்தால் சேவியர் பார்க்கும் போதெல்லாம் ஒரு கேலியோடு பார்ப்பார். மற்ற போலீஸ் அதிகாரிகளிடம் சொல்லி சிரிப்பார்.

போய்விடுவோம்.

எழுந்தான்.

குளியலறைக்குள் நுழைந்து - பதினைந்து நிமிடத்தில் தயாராகி - ஹீரோ ஹோண்டாவை உதைத்து - சென்னை நகரின் விடியல் தெருக்களில் மார்கழிக் காற்றை சுவாசித்து - ஜெயில் காம்பஸுக்குள் நுழைந்த போது மணி 5.25.

பைக்கை நிறுத்திவிட்டு - சிறைச்சாலையின் பிரதான கதவுக்குப் போக செண்ட்ரீஸ் மறித்தார்கள்.

''ஸார்... நீங்க...?''

''விஷ்ணு...''

சல்யூட் வைத்து உள்ளே அனுப்பினார்கள்.

போனான்.

சிறைச்சாலை - ஆங்காங்கே நாற்பது வாட்ஸ் பல்புகளின்

வெளிச்சச் சிதறல்களோடு தெரிந்தது. வைகறை இருட்டில் உறைந்திருந்த மரங்களில் காகங்களின் இரைச்சல்கள். கிழக்கு வானத்தில் இன்னமும் இருட்டு.

வராந்தாவில் கனமான பூட்ஸ் சத்தத்தோடு - வார்டன் சேவியர் பிரான்ஸிஸ் எதிர்பட்டார்.

சிரித்தார் மெல்ல.

"குட்மார்னிங் சொல்லக்கூடாது. வாங்க... அந்தப் பக்கமா இருக்கிற பெண்கள் சிறைப்பகுதிக்கு போயிடுவோம்..."

விஷ்ணு அவரோடு நடந்தான். நீளமான வராந்தா.

கண்டெம் வார்டு வந்தது. முன்னதாக தெரிந்த மங்கலான வெளிச்ச அறைக்குள் விஷ்ணுவும் சேவியரும் நுழைந்தார்கள்.

அந்தப் பெண் ஒரு ஸ்டூலில் உட்கார்த்தி வைக்கப்பட்டிருந்தாள். இளம் பெண். மாநிறத்தில் திருத்தமான முகம். கண்களில் அப்போது மரணபயம். உடம்பில் வெள்ளை பார்டரோடு கூடிய நீல நிறச் சேலை.

அவளைச் சுற்றி - ஒருடாக்டர், ஒரு மாஜிஸ்ட்ரேட், ஒரு இன்ஸ்பெக்டர், பெண் வார்டன்.

டாக்டர் அவளுடைய உடம்பை - பரிசோதித்து பார்த்துவிட்டு 'உடம்பில் எந்தக் கோளாறும் இல்லை. தூக்கில் போடலாம்' என்ற வாசகத்தை எழுதி கையெழுத்தை போட்டு மெடிக்கல் ரிப்போர்ட்டை மாஜிஸ்ட்ரேட்டிடம் நீட்டினார். அவர் வாங்கிப் பார்த்துவிட்டு - அந்தப் பெண்ணுக்கு பக்கமாய் வந்தார்.

"ஏதாவது சொல்ல விரும்பறியா...?"

"ஆமா..."

"சொல்லு..."

"இது என்னோட ஆசையும் கூட..."

"சொல்லு..."

"இந்த இந்தியாவில் இருக்கிற அத்தனை நீதிமன்றங்களையும் இடிச்சுட்டு அந்த இடத்துல விவசாயம் பண்ணணும்..."

"இந்த இடக்கு பேச்செல்லாம் வேண்டாம்... நீ பண்ணின குற்றத்துக்கு நீதிமன்றம் தண்டனை கொடுத்திருக்கு. அதை அவமதிக்கிற மாதிரி பேசறது சரியில்லை..."

"நான் எந்தக் குற்றமும் பண்ணலை..."

அவள் நடக்க - மற்றவர்கள் அவளுக்கு இருபுறமும் சூழ்ந்து நடந்தார்கள். பூட்ஸ் சத்தம் எதிரொலித்தது.

கம்பிகளுக்குப் பின்னால் இருந்த பெண் கைதிகள் முட்டி மோதிக் கொண்டு எட்டிப் பார்த்தார்கள்.

இரண்டு நிமிஷ நடைக்குப்பின் -

தூக்கு போடும் இடமான 'கேல்வோஸ்' வந்தது. விஷ்ணுவுக்கு லேசாய் வயிற்றை பிறாண்டியது. வைகறை இருட்டில் - தூக்குமேடையும் கயிற்று சுருக்கும் நிழல் உருவங்களாய் தெரிந்தன. பக்கத்திலேயே லீவரை பிடித்து இழுக்க தயாராய் காத்திருக்கும் ஒரு ஆள்.

விஷ்ணு தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான்.

5.45.

இன்னும் பத்து நிமிஷம் பாக்கியிருந்தது. கேல்வோஸை விட்டு தள்ளியிருந்த பிரம்மாண்டமான தூங்கு மூஞ்சி மரத்தில் - பறவைகள் வைகறைக் கூச்சல் போட்டன.

மாஜிஸ்ட்ரேட் அந்தப் பெண்ணிடம் கேட்டார்.

''ஏதாவது ப்ரேயர் பண்ணனுமா...?''

அவள் உதட்டைச் சுழித்தாள். ''கடவுள் நம்பிக்கை என் கிட்டயிருந்து போய் ரொம்ப நாளாச்சு...டயத்தை வேஸ்ட் பண்ணாமே உங்க சடங்குகளை ஆரம்பிங்க...''

இன்ஸ்பெக்டர் தூக்கு போடக் காத்திருக்கிற நபர்க்கு கண்ணைக்காட்ட அவன் அந்தப் பெண்ணுக்கு பக்கத்தில் வந்து - தோளைத் தொட்டு மேடைக்குக் கூட்டிக்கொண்டு போனான்.

மேடையின் மையத்தில் நிறுத்தி - ஒரு கயிற்றால் அவளுடைய கைகளை பின்னுக்கு வளைத்து கட்டினான்.

நேரம் 5.46.

முகத்திற்கு கறுப்புத்துணி மாட்டப்பட்டது.

5.47.

கழுத்துக்கு சுருக்கு மாட்டப்பட்டது.

5.48.

விஷ்ணுவின் இருதயத்துடிப்பு உச்சபட்சத்திற்கு போயிற்று. ஏழு நிமிடம் கடந்ததும் இந்தப் பெண்ணின் உயிரற்ற உடல் இந்த கயிற்றில் ஊசலாடிக் கொண்டிருக்கும்.

'இந்தப் பெண் ஒரு வேளை குற்றம் செய்யாதவளா?'

'அதெப்படி இருக்க முடியும்...?'

செஷன்ஸ் கோர்ட், ஹைகோர்ட், சுப்ரீம்கோர்ட் மூன்றி

லும் தூக்கு தண்டனை ஊர்ஜிதம் செய்யப்பட்டிருக்கிறது. பிர ஸிடெண்ட்டுக்கு போட்ட கருணை மனுவும் தள்ளுபடி செய் யப்பட்டிருக்கிறது.

'குற்றம் ஊர்ஜிதமாகாமல் தூக்குதண்டனை விதிக்க மாட்டார்களே...?'

நேரம் 5.49.

மாஜிஸ்ட்ரேட் வாட்ச்சைப் பார்த்தபடி - இருக்க மற்ற எல்லோரும் தூக்கு மேடையையே பார்த்தார்கள்.

5.50.

தூக்குபோடும் ஆள் - லீவரின் மேல்கையை வைத்தான். மாஜிஸ்ட்ரேட்டின் கண்ணசைவுக்காக காத்திருக்க ஆரம்பித் தான்.

விநாடிகள் வேகமாய் நொண்டியடித்தன.

# 2

கன்யா குருகுல க்ஷேத்திரம் சந்தோஷ அலைகளில் தத்தளித்துக் கொண்டிருந்தது. சுவர்கள் வெள்ளையடிக்கப் பட்டு - கதவுகளும் ஜன்னல்களும் புது பெயிண்டில் குளித் தன. குருகுலத்துக்கு முன்பக்கம் இருந்த மைதானப் பரப்பு - சுத்தம் செய்யப்பட்டு ஆங்காங்கே ரங்கோலி கோலம் தெரித் தது.

ஸ்பீக்கர்களில் மெலிதான நாதஸ்வர இசை காற்றோடு கல்யாணம் செய்து கொண்டு குடும்பம் நடத்தியது.

கன்யா குருகுலத்தின் வாசலில் - பேனர்கள் அசைந்தது. அதில் தங்க நிற எழுத்துக்கள்.

''அருள்மிகு ஜோதிமயானந்த சுவாமிகள் அவர்களே வருக...!''

''உங்கள் புண்ணிய பாதம் தொட்டு வணங்குகிறோம். பாவங்களை களையுங்கள்.''

குருகுலத்தின் உள்ளே டெலிவிஷன் காமிரா ஒன்று காத் திருக்க - பக்கத்திலேயே பத்திரிகை நிருபர்கள், வீடியோ கிரா ஃபர்கள் மைதானத்தின் மையப் பரப்பிலிருந்து கடைசி வரைக்கும் கன்யா குருகுலத்தைச் சேர்ந்த பெண்கள் சீருடைக ளில் வரிசையாய் உட்கார்ந்திருந்தார்கள். குருகுலத்தின் தாளா ளரான நாகரத்தினம்மாள் மைக்கில் பேசிக்கொண்டிருந்தாள். தூய கதர்சேலை. விபூதி நெற்றியோடு கூடிய ஐம்பது வயது உடம்பு. ஒல்லியான தேகவாகு. கண்களில் வெள்ளெழுத்துக் கண்ணாடி.

''நம் கன்யா குருகுலத்தைச் சேர்ந்த அனைவருக்கும் இன்

றைக்கு ஒரு தங்கமான நாள். நமது குருகுலம் ஆரம்பித்து இருபது ஆண்டுகள் முடியப்போகிற இந்த நேரத்தில் - அருள் மிகு ஜோதிமயானந்த சுவாமிகள் அவர்கள் இங்கே வர உள்ளார். அவர்கள் அருளுரை வழங்கும் போது அனைவரும் அமைதியோடு இருந்து ஒத்துழைப்பு கொடுக்க வேண்டும். சுவாமிகள் அருளுரை வழங்கி முடித்ததும் ஏற்கெனவே சொல்லியுள்ளபடி - குறிப்பிட்ட நம் குருகுலத்தைச்சேர்ந்த பெண்கள் மட்டும் எழுந்து நின்று ஆன்மீக சம்பந்தப்பட்ட கேள்விகளைக் கேட்கலாம். அதிகப்பிரசங்கித்தனமான கேள்விகளைக் கேட்டக்கூடாது. மேலும்...''

பேசிக் கொண்டிருக்கும்போதே - குருகுலத்தின் காம்பௌண்ட் கேட் அருகே அந்தக் கார் ஹாரன் சத்தம் கேட்டது.

எல்லோரும் திரும்பிப் பார்த்தார்கள்.

கார் பானெட் மூக்கில் - காவிக்கொடி பறக்க அந்த அம்பாஸிடர் கார் உள்ளே நுழைந்தது. தொடர்ந்து நான்கைந்து கார்கள்.

நாகரத்தினம்மாள் மேடையை விட்டு அவசர அவசரமாய் இறங்கினாள். பக்கத்தில் இருந்த டீச்சர்களில் நான்கைந்து பேர்களை அழைத்துக்கொண்டு சந்தனமாலையோடு முன்னே போனாள்.

குருகுலத்தைச் சேர்ந்த பத்து வயதிலிருந்து முப்பது வயதுக்கு உட்பட்ட பெண்கள் கைகளை உயர்த்தி கோஷித்தார்கள்.

''ஜோதிமயானந்த சுவாமிகளுக்கு''

''ஜே...!''

''ஹரிஹர சங்கரா...''

''ஜெய ஜெய சங்கரா...''

கார் வந்து - மேடைக்குப் பக்கத்தில் நின்றதும் - நாகரத்தினம்மாள் கதவைத் திறக்க - ஜோதிமயானந்த சுவாமிகள் - வெள்ளரிப்பழ நிறத்தில் வெளிப்பட்டார். வயது அறுபதிலிருந்து எழுபதுக்குள். முகத்தில் அசாத்திய தேஜஸ். தூய வெண்தாடி. வெற்று மார்பு. இடையில் மட்டும் காவி வேஷ்டி. நெற்றி நிறையபளீர் விபூதி. மையத்தில் குங்குமப் பொட்டு. கழுத்தில் ருத்திராட்ச மாலை.

''சுவாமிகள் வரணும்...''

நாகரத்தினம்மாள் ஜோதிமயானந்தாவின் கால்களில் விழுந்தாள்.

சுவாமிகள் சிரித்தார்.

''அனாதைப் பெண்களுக்கு வாழ்வளிக்கிற நீங்கள்

ஆரோக்கியமாய் பல வருஷம் வாழவேண்டும்...''

அணிவிக்கப்பட்ட சந்தன மாலையோடு ஜோதிமயா னந்த சுவாமிகள் மேடையை நோக்கி போனார்.

டி.வி. காமிரா இயங்கியது. வீடியோ கிராஃபர்கள் முன் னாலும் பின்னாலும் ஓடி வந்தார்கள்.

''ஜெய ஜெய சங்கரா...''

''ஹரிஹர சங்கரா...''

குருகுலப் பெண்கள் உச்சஸ்தாயில் கோஷித்துக் கொண் டிருந்தார்கள். மேடைக்கு முன்புறம் இருந்த பெண்கள் பூக்க ளைத் தூவினார்கள். காற்றில் மல்லிகையின் மணம்.

சுவாமிகள் நாகரத்தினம்மாளிடம் கேட்டார்.

''மொத்தம் இங்கே எத்தனை பெண்கள்...?''

''முன்னூற்றி இருபத்தொன்பது பேர் சுவாமி...''

''எல்லா வயதிலும் பெண்கள் இருக்கிறார்கள் இல் லையா?''

''ஆமாம் சுவாமி...''

''இவ்வளவு பேர்க்கும் உணவு, உடை, உறைவிடம் மூன் றும் இலவசம்தானே...?''

''ஆமாம்...''

''உண்மையிலேயே இது ஒரு பெரிய சாதனை...''

''இது சாதனையல்ல சுவாமி. உங்களைப் போன்றவர்க ளின் ஆசிர்வாதம்தான்...''

மேடை ஏறினார்கள்.

கோஷம் அதிகமாயிற்று.

''ஜெய ஜெய சங்கரா...''

''ஹரிஹர சங்கரா...''

ஜோதிமயானந்த சுவாமிகள் அமர்ந்ததும் கோஷம் நின் றது. நாகரத்தினம்மாள் சுவாமிகளிடம் பவ்யமாய் குனிந்து கேட்டாள்.

''விழாவை ஆரம்பிக்கலாமா...?''

''ம்....''

அவர் தலையாட்ட, நாகரத்தினம்மாள் மைக்குக்குப் பக் கத்தில் வந்தாள்.

''இப்போது கடவுள் வாழ்த்து. நமது குருகுலத்தைச் சேர்ந்த பெண்கள் ஜெயக்கொடியும், ரத்னமாலாவும் பாடு வார்கள்.

மேடைக்கு முன்புறமாய் உட்கார்ந்திருந்த அந்த இரண்டு இளம் பெண்களும் எழுந்தார்கள். மேடையேறி மார்புக்குக் குறுக்காய் கைகளைக்கட்டிக் கொண்டு மைக்குக்கு முன்பாய் நின்றார்கள். ஒரே விநாடியில் வாய்களைத் திறந்தார்கள். இனிய குரல்.

கைத்தல நிறைகனி அப்பமொடு அவல் பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணி
கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவர்
கற்பகம் எனவினை கடிதேகும்.
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே.
முத்தமிழ் உடை...

பாட்டு சட்டென்று நின்றது. பாடிக் கொண்டிருந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் பாடுவதை நிறுத்திவிட்டு - ஜோதிமயானந்த சுவாமிகளிடம் திரும்பினார்கள். நாகரத்தி னம்மாள் பதட்டப்பட்டாள்.

''ம்... கடவுள் வாழ்த்தை பாடுங்க... ஏன்... பாட்டை நிறுத்திட்டீங்க...?'' நாகரத்தினம்மாள் கேட்ட கேள்விக்கு பதில் சொல்லாமல் - ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் - தங்கள் மார்புப் பகுதிக்குள் மறைத்து வைத்திருந்த ரிவால்வர் களை எடுத்தார்கள்.

கூட்டம் ஸ்தம்பிக்க -

ஜோதிமயானந்தா திடுக்கிட்டு முடிவதற்குள் - இரண்டு பேர்களின் கைகளில் இருந்த ரிவால்வர்கள் ஒரே நேரத்தில் சீறின.

''ட்ட்ட்டுமீல்....''

ஜோதிமயானந்தாவின் வலது மார்பிலும், இடது மார்பி லும் தோட்டாக்கள் பாய - அவர் உடனே ரத்தமயமாகி நாற்கா லியை உருட்டிக் கொண்டு சாய்ந்தார்.

## 3

கறுப்புத் துணியால் முகம் போர்த்தப்பட்டு கழுத்தில் சுருக்கோடு மரணத்தை எதிர்நோக்கி கடைசி விநாடிகளில் இருந்த அந்தப் பெண்ணை விஷ்ணு வேகமாய் துடிக்கிற இரு தயத்தோடு பார்த்துக் கொண்டிருக்கும் போதே -

அந்த செண்ட்ரி கையில் ஒரு இளம் சிவப்பு தாளோடு வேகவேகமாய் ஓடிவந்தான்.

''ஸார்! ஸ்டாப்... த.... ப்ரொஸீடிங்க்ஸ்...''

அவனுடைய கத்தலைக் கேட்டு எல்லோரும் திடுக்கிட்டு திரும்பினார்கள். மூச்சிறைக்க ஓடிவந்த செண்ட்ரி மாஜிஸ்ட்ரேட்டுக்கு முன்னால் வந்து சல்யூட் அடித்து நின்றான்.

''ஸார்... கவர்னர் மாளிகையிலிருந்து மெஸேஜ்.''

மாஜிஸ்ட்ரேட் வாங்கிப் பார்த்தார்.

ஹிந்தியிலும், ஆங்கிலத்திலும் அந்த செய்தி சுடச் சுட இருந்தது.

'நமது பாரத ஜனாதிபதி வீரேந்திர பிரசாத் இன்று விடியற் காலை நான்குமணி அளவில் உயிர் துறந்துவிட்டார். அவருடைய மறைவையொட்டி இன்று நிறைவேற்றப்படவேண்டிய எல்லா தூக்குத்தண்டனையும் ஒருவார காலத்திற்கு தள்ளி வைக்க வேண்டும் என்று இந்திய அரசு உத்திரவிட்டுள்ளது. ஒரு வாரம் கழித்து தண்டனைகளை நிறைவேற்றலாம் - செய்தி கவர்னர் மாளிகை மூலமாக.'

மாஜிஸ்ட்ரேட் பக்கத்தில் நின்றிருந்த இன்ஸ்பெக்டர்க்கு அந்த அறிவிப்புத்தாளைக் கொடுக்க - அவர் படித்துவிட்டு தூக்கு போடும் ஆசாமியை ஏறிட்டார். 'அவளைக் கீழே கொண்டுவா' என்பது போல் சைகை காட்ட - அவன் குழப்பமாய் அந்தப் பெண்ணை நெருங்கி முகத்தை மூடியிருந்த கறுப்புத் துணியை எடுத்தான். கைகளை கட்டியிருந்த கயிற்றை அவிழ்த்தான்.

அவள் கேட்டாள்.

''என்னாச்சு...? ஏன் என்னை தூக்குல போடலை...''

இன்ஸ்பெக்டர் சொன்னார். ''ஜனாதிபதி மரணம். துக்கம் அனுஷ்டிக்கிற ஒரு வார காலத்துக்கு எந்தத் தூக்கு தண்டனையும் நிறைவேற்றப்படக் கூடாது...''

அவள் இறங்கி வந்தாள்.

''என்னோட கருணை மனுவை நிராகரிச்ச ஜனாதிபதி மரணமடைந்தது மூலமாய் என்னோட தண்டனையை ஒரு வாரம் தள்ளிபோட்டிருக்கார். சட்டம் எனக்கு காட்டின முதல் சலுகை இது.''

''இந்த சிறைச்சாலை சரித்திரத்திலேயே தூக்குக் கயிறு வரைக்கும் போய்ட்டு உயிரோடு திரும்பிய முதல் கைதி நீதான்... ஒரு வாரத்துக்கு அப்புறம் நீ இந்த மேடையில ஏறித்தான் ஆகணும்... ம்...நட...''

அவள் ஸெல்லுக்கு கொண்டு போகப்பட்டாள். விஷ்ணு ஜேவியரின் தோளைத் தொட்டான்.

''ஸார்...''

''என்ன... விஷ்ணு...?''

''அந்தப் பொண்ணுகூட நான் கொஞ்சம் பேசணுமே

''என்ன பேசப் போறீங்க...?''

''ஒண்ணும் சொல்லத் தெரியலை. ஏதாவது பேசணு போல் இருக்கு... ஒரு அஞ்சு நிமிஷம் போதும்...''

''தனியா பேசணுமா...''

''ஆமா...''

''ஏற்பாடு பண்ணித் தர்றேன்... வாங்க...''

## 4

ஜோதிமயானந்த சுவாமிகள் தன் மார்பில் தோ டாக்களை வாங்கிய அந்தக் கணமே உயிரை விட்டிருக் சுற்றிலும் இருந்த கும்பல் 'ஹா'வென்று ஸ்தம்பித்து - ப சுதாரித்து ஜெயக்கொடியையும், ரத்னமாலாவையும் பிடி முயல அவர்கள் இருவரும் கர்ஜித்து வானத்தை நோக் சுட்டார்கள்.

ஜெயக்கொடி மைக்கைப் பிடித்துக் கொண்டு கத்தின

''யாரும்...,பக்கத்தில் வரக்கூடாது... நாங்கள் செய் கொலையில்லை. வேள்வி. ஜோதிமயானந்தாவை நீங் மகாத்மாவாய் நினைக்கிறீர்கள். அதுதவறு. எங்களை பொறுத்தவரைக்கும் அந்த ஆள் மனிதனே இல்லை. கா உடை உடுத்திய வேஷதாரி. கபடதாரி. பகலில் உத்தம இரவில் உன்மத்தன். அவன் கடவுள் சேவைக்கு தன்னை அ பணித்துக் கொண்டதாய் நீங்கள் நினைக்கிறீர்கள்.அது தவ அவனுக்கு வேண்டியதெல்லாம் பாவைகள்தான். இவ டைய காமப் பசிக்கு இரையான கன்னிப் பெண்கள் ஏரா பூஜை விளக்காய் இருக்கும் குடும்பப் பெண்கள் மேல் இவ பார்வை பட்டால் போதும் அவர்கள் தெரு விளக்காகிவி வார்கள். அந்த காமாந்தகன் இந்த பூமியில் இருக்கக்கூடா இந்தப் புனிதமான பாரத மண்ணிலே உலவுகிற காற்றை சுவ சிக்கக் கூடாது. இவன் பாதங்கள் பூமியில் படக்கூடாது நானும் ரத்னமாலாவும் ஒரு மகத்தான பணியைச் செய் முடித்திருக்கிறோம். அந்த நிம்மதியோடு சாகிறோம்...''

சொல்லிக் கொண்டே நெற்றிப் பொட்டில் தன் கைபி இருந்த துப்பாக்கியை பொருத்திக் கொண்டாள். ரத்னமா வும் தன் கையில் இருந்த ரிவால்வரை நெற்றிக்குக் கொடு தாள்.

ட்ரிக்கர்களை அழுத்துவதற்குள் மேடையின் இரண் பக்கங்களிலும் நின்றிருந்த ஜோதிமயானந்தாவின் சீடர்கள் குபீரென்று மேடை மேல் ஏறி இரண்டு பேர்களின் கையி

ருந்த துப்பாக்கிகளைத் தட்டிவிட்டார்கள்.

''டேய்... விடுங்கடா...''

''நாங்க சாகணும்... சட்டம் தர்ற தண்டனை எங்களுக்கு வேண்டாம். எங்க உயிரைப் பறிக்க உங்க சட்டத்துக்கு உரிமையில்லை...''

பேசப் பேசவே -

ஜெயக்கொடியும் - ரத்னமாலாவும் அமுக்கப்பட்டார்கள். பாதுகாப்புக்கு வந்திருந்த இரண்டொரு போலீஸார் ஓடி வந்தார்கள்.

# 5

விஷ்ணுவுக்கு அனுமதி கிடைத்து - அந்தப் பெண் இருந்த செல்லுக்குள் நுழைந்த போது மணி ஆறேகால்.

சூரியன் சிறைச்சாலை மரங்களுக்குப் பின்னால் தகதகத்தான். மேகங்களின் ஓரங்களில் குங்குமத் தூவல். பறவைகளின் சத்தம் குறைந்திருந்தது.

உள்ளே நுழைகிற விஷ்ணுவைப் பார்த்ததும் - சுவரின் மூலையில் முழங்காலைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்த - அந்தப் பெண் நிமிர்ந்தாள்.

நெற்றி சுருங்கியது.

என்ன என்பது போல் கண்கள் கேட்டன.

விஷ்ணு சொன்னான்.

''உன் கூட கொஞ்சம் பேசணும்...''

அவள் சில விநாடிகள் மௌனித்துவிட்டு ''என்ன பேசணும்...?'' என்றாள்.

''உன்னோட உண்மையான பேரே ஜெயக்கொடியா...?''

''ஆமா...''

''பேர் வித்தியாசமா இருக்கு...''

''நீங்க போலீஸ் ஆபீஸரா...? இல்லை பத்திரிக்கை நிருபரா...''

''ரெண்டுமே இல்லை...''

''பின்னே...?''

''நான் ஒரு வக்கீல்.'' - பொய் சொன்னான்.

ஜெயக்கொடி வேண்டா வெறுப்பாய் புன்னகைத்தாள்.

''ஒரு வக்கீல் என்னை வந்து பார்க்க வேண்டிய காலக்கட்

[illegible]''

விஷ்ணு அங்கிருந்த சிமெண்ட் திட்டின் மேல் உட்கார்ந்தான்.

''கடவுள் வாழ்த்து பாடிகிட்டு இருக்கும்போதே - அதை பாதியில் நிறுத்திட்டு கன்யா குருகுலத்துக்கு சிறப்பு விருந்தினராய் வந்திருந்த ஜோதிமயானந்தாவை நீயும் ரத்னமாலாவும் இற பொண்ணும் சுட்டுக் கொலை பண்ணினது இந்திய பிரசித்தம். அந்தக் கேஸை சி.பி.ஐ. ஹேண்டில் பண்ணினாங்க. தூக்கு தண்டனையும் வாங்கிக் குடுத்திருக்காங்க...''

ஜெயக்கொடி எரிச்சலாய் விஷ்ணுவை பார்த்தாள்.

''முடிஞ்சு போனதைப் பத்தி பேசி என்ன பிரயோஜனம்...? எனக்கும் ரத்னமாலாவுக்கும் நாள் குறிச்சாச்சு... இன்னிக்கு நான் தூக்குல தொங்கியிருக்க வேண்டியது. ஜனாதிபதி மண்டையைப் போட்டதினால - தண்டனை ஒரு வாரம் தள்ளிப் போயிருக்கு...''

விஷ்ணு புன்னகைத்தான். ''அந்த தண்டனை தள்ளி போனதாலதான்... உன்னைப் பார்த்து பேச வந்திருக்கேன்... நீ நிரபராதியாய் இருக்கலாமோன்னு என் மனசுக்குள்ளே முதல் முதலா ஒரு சந்தேகம்...''

ஜெயக்கொடியின் கண்களில் ஒரு சின்ன மகிழ்ச்சி சுடர்

''நீங்க... என்ன சொல்றீங்க...?''

''விதிச்ச மரணம் காரணம் இல்லாமே தள்ளி போகாது...''

''என் மரணம் தள்ளி போனதுக்கு காரணம் ஜனாதிபதி இறந்து போனதுதான்...''

''அவர் இன்னிக்குன்னு பார்த்து ஏன் சாகணும்?''

''இ... இப்ப நீங்க என்ன சொல்ல வர்றீங்க...?''

''உன் பக்கம் ஏதோ நியாயம் இருக்குன்னு சொல்ல வரேன்... ஜோதிமயானந்தா கொலைக் கேஸைப் பத்தி பேப்பர்ல படிச்சிருக்கேன்... இருந்தாலும் அதைப்பத்தி - உன்னோட வாயால தெரிஞ்சுக்க விரும்பறேன்...''

''இனிமே எங்களை காப்பாத்த முடியும்ன்னு நினைக்கிறீங்களா?''

''லேசா நம்பிக்கை இருக்கு...''

''கையும் களவுமா பிடிபட்டிருக்கோம்... டெலிவிஷன் படம் பிடிச்சு ஊர் பூராவும் காட்டியிருக்காங்க... ரெண்டு வருஷத்துக்கு முந்தின ஜூன் மாசப் பேப்பர் பூராவும் நாங்க தான்...''

''பழசையெல்லாம் மறந்துடு ஜெயக்கொடி... எதையும் மறைக்காம நடந்த சம்பவத்தைப் பற்றி என்கிட்ட

சொல்லு...''

''சொல்லி பிரயோஜனமில்லை. அந்த ஆண்டவனால கூட எங்களைக் காப்பாத்த முடியாது...''

''இதோ பார்... நீ... தூக்கு கயித்தோட விளிம்பு வரைக்கும் போய் - கடைசி நாலு நிமிஷத்துல தப்பிச்சுட்டு வந்து - இந்த நிமிஷம் என்கிட்ட பேசிட்டிருக்கே... இது எப்படி சாத்தியம்...? நம்மையும் மீறின ஏதோ ஒரு சக்தி இருக்கு...''

''நீங்க சொன்ன அந்த சக்தி அடுத்த வாரமும் எனக்கு உதவிக்கு வருமா...?''

''வரும்... இனி உனக்கு மரணம் கிடையாது. சொல்லு அன்னிக்கு என்ன நடந்தது...?''

ஒருவித அவநம்பிக்கையோடு - ஜெயக்கொடி சொல்ல ஆரம்பித்தாள்.

# 6

விவேக் தனக்கு எதிரில் உட்கார்ந்திருந்த விஷ்ணுவையே இமைக்காமல் சில விநாடிகள் பார்த்துவிட்டு கேட்டான்.

''என்ன விளையாடறியா...?''

''ஸ... ஸார்...''

''செத்துப் போன கேஸுக்கு எப்படி உயிர் குடுக்க முடியும்? மூணு கோர்ட்லேயும் முடிவான தீர்ப்பு அது... கேஸை டீல் பண்ணியது சி.பி.ஐ. ஆட்கள். அந்தக் கேஸைப்பத்தி ஓரளவு எனக்கும் தெரியும்... கடவுள் வாழ்த்து பாடிக் கொண்டிருந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் - தன் மார்புப் பகுதிகளில் மறைச்சு வெச்சிருந்த துப்பாக்கிகளை எடுத்து - அத்தனை பேர்களுக்கு முன்னிலையில் - ஜோதிமயானந்த சுவாமிகளை சுட்டு கொன்னிருக்காங்க... ,ரா ஹேண்ட்டடாக பிடிபட்டிருக்காங்க... ஐ விட்னஸ் எத்தனை பேர் தெரியுமா...? நானூற்று சொச்சம் பேர். கொலையைப் பார்த்த 'ஐ விட்னஸ்' ஒருத்தர் இருந்தாலே ஜட்ஜ் கண்ணை மூடிகிட்டு தூக்குத் தண்டனை குடுத்துடுவார்... இவ்வளவு பேர் ஐ விட்னஸாய் இருக்கும்போது கேட்கவா வேணும்...''

''ஸார்...! உங்களை மாதிரிதான் நானும் நினைச்சுட்டிருந்தேன்... ஆனா கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி ஜெயக்கொடி என்கிட்டே சொன்ன ஸ்டேட்மெண்ட்டைப் பார்க்கும் போது... கொஞ்சம் உறுத்தலா இருக்கு...''

''அவ ஸ்டேட்மெண்ட் என்ன...?''

''அவகிட்ட எப்படி துப்பாக்கி வந்ததுன்னு தெரியா

தாம். எதுக்காக சுட்டோம்ன்னும் தெரியாதாம்...''

''இது அவ கோர்ட்ல சொன்ன ஸ்டேட்மெண்ட் தானே...? ஜட்ஜ்கள் காதுல பூ வெச்சிருக்கிறவங்களாயிருந்தா - அந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் சொன்னதை நம்பி விடுதலை பண்ணியிருப்பாங்க. ஆனா நம்ம நாட்டு ஜட்ஜ்கள் அப்படியில்லையே... ஜீராவில் குலோப் ஜாமூன் ஊறுகிற மாதிரி ஒரு கேஸை ரெண்டு மூணு வருஷமாவது ஊறப் போட்டு... வாத பிரதிவாதங்களைக் கேட்டுத்தானே ஜட்ஜ் மெண்ட்டே சொல்றாங்க...''

ரூபலா டீ நிரம்பிய கப் அண்ட் சாஸர்களோடு வந்தாள் ''என்ன... விஷ்ணு...? காலங்கார்த்தாலே ரொம்பவும் ஸீரியஸான மேட்டரோடு வந்திருக்கே...?''

விவேக் புன்னகையோடு அவளை ஏறிட்டான். ''ரூபலா ப்யூஸ் போன பல்பை மறுபடியும் எரிய வைக்க முடியுமா...?''

''முடியாது...''

''செத்த பாம்புக்கு முன்னாடி மகுடி எடுத்து ஊதினா அது தலையைத் தூக்குமா...?''

''தூக்காது...''

''அது ரெண்டுமே சாத்தியம்ன்னு விஷ்ணு சொல்றான். பய என்ன பண்ணியிருக்கான் தெரியுமோ...?''

''என்ன...?''

''ஜெயக்கொடிங்கிற ஒரு பொண்ணோட தூக்கு தண்டனை நிறைவேறறதை பார்க்கிறதுக்காக போயிருக்கான். தூக்கு போடப் போகிற கடைசி நிமிஷங்கள்ல ஜனாதிபதியோட 'டெத் நியூஸ்' வரவே தூக்கு தண்டனையை ஒரு வாரம் தள்ளி வெச்சுட்டாங்க... உடனே நம்ம பயலுக்கு ஒரு செண்டிமெண்ட். ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் குற்றவாளிகளா இருக்க முடியாது... அந்த கேஸை மறுபடியும் துருவிப் பார்க்கணும்ன்னு சொல்லிகிட்டு வந்திருக்கான்...''

ரூபலா டீ கப்பை விஷ்ணுவிடம் நீட்டியபடி கேட்டாள்.

''அப்படியா விஷ்ணு...?''

''ஆமா மேடம்... அந்தப் பொண்ணைப் பார்த்துப் பேசிட்டுத்தான் வர்றேன்... அவளோட ஸ்டேட்மெண்ட்ல நிறைய கர்ப்ஸ் இருக்கு. ஸார் உங்ககிட்டே ஒரு கேள்வியைக் கேட்டார். ப்யூஸ் போன பல்பை மறுபடியும் எரிய வைக்க முடியுமான்னு கேட்டார். நான் எத்தனை தடவை எரிய வெச்சிருக்கேன். எப்படின்னு கேட்கறீங்களா...? பல்புக்குள்ளே டங்க்ஸ்டன் கம்பி இழை அறுந்து ரெண்டு துண்டா ஊசலாடிகிட்டு இருக்கும்... நான் அந்த பல்பை அண்ணாந்து பிடிச்சு...

லேசா அசைச்சு அசைச்சு... அறுந்துபோன ரெண்டு டங்க்ஸ் டன் இழைகளையும் ஒட்ட வெச்சு பல்பை எரிய பண்ணியி ருக்கேன்...''

''அட...!'' ரூபலா வியக்க - விஷ்ணு தொடர்ந்தான். ''ஸார் ரெண்டாவதா செத்த பாம்பு உதாரணம் சொன்னார். ஒரு பாம்பு அவ்வளவு சீக்கிரத்தில் சாகாதாம். எப்படித்தான் அடிச்சு போட்டாலும் அதை எரிக்கிற வரைக்கும் வாலாவது ஆடிகிட்டு இருக்குமாம்...''

''பேஷ்... பேஷ்...''

விவேக் ரூபலாவை முறைத்தான். ''என்ன... பேஷ்... பேஷ்...? காலங்கார்த்தால ஜெயிலுக்க போய்ட்டு வந்து எதையோ பேத்திகிட்டு உட்கார்ந்திருக்கான். ஜோதிமயா னந்தா சுவாமிகள் எவ்வளவு பெரிய மனுஷர். கலியுகக் கட வுள்ன்னே அவர்க்கு பேர் உண்டு. அப்பேர்ப்பட்ட மனுஷரை - பட்டப்பகல்ல பொது மேடையில் - நூத்துக் கணக்கான பேர் பார்த்துக் கொண்டிருக்க - சுட்டுக் கொன்னிருக்காங்க... அவரை ஏன் சுட்டுக் கொலை பண்ணினோம்ன்னு... ஜெயக் கொடியே மைக்கை பிடிச்சு பேசியிருக்கா. செய்யறதை செஞ் சுட்டு... நாங்க கொலையாளிகள் இல்லைன்னு சொன்னா எப்படி நம்பறது?''

விவேக் சுவரில் மாட்டியிருந்த டென்னிஸ் ராக்கெட்டை எடுத்துக் கொண்டு கிளம்பிவிட்டான்.

# 7

ஒரு அரசியல் கொலை விஷயமாய் - ஹைதராபாத் போய் விசாரணையை முடித்துக்கொண்டு - மூன்று நாள் கழித்து சென்னை திரும்பியிருந்தான் விவேக்.

இரவு பத்தரை மணி.

டைனிங் டேபிளில் சப்பாத்தியை மென்று கொண்டிருந்த விவேக் ஞாபகத்திற்கு வந்தவனாய் கேட்டான்.

''ரூபலா! விஷ்ணு ஏதாவது போன் பண்ணியிருந்தா னா?''

''போன் பண்ணலை... சாயந்தரம் ஆறு மணி சுமார்க்கு ஆள் இங்கே வந்திருந்தார்....''

''என்னவாம்...? அந்த ஜெயக்கொடி கேஸை விட்டுட் டானா...! இல்லே இன்னமும் கெட்டியா பிடிச்சுட்டிருக் கானா...?''

''விஷ்ணு அந்த கேஸ்ல இப்ப படு தீவிரம்... ட்யூட்டி நேரம் போக மத்த நேரமெல்லாம் இதே வேலைதானாம்... ஏதோ க்ளு கிடைச்சிருக்காம்.''

''நான் கேட்கலை... உங்க கிட்டத்தான் அதைப் ப
பேசணும்ன்னு வந்தார்...''

''வேலை மெனக்கெடறான்...''

''எனக்கென்னமோ விஷ்ணு சொல்றது நியாய
படுது...''

''நீயும் கட்சி மாறிட்டியா?''

''இல்லீங்க... எனக்கும் ஒரு நெருடல்தான்...''

''என்ன நெருடல்...?''

''ஒரு விஷயத்தை நீங்க யோசிச்சு பார்த்தீங்களா?''

''என்ன...?''

''ஜோதிமயானந்தாவை ஜெயக்கொடியும், ரத்னமா
வும் எப்படி எந்த இடத்துல வெச்சு கொலை பண்ணின
க...?''

''பப்ளிக்கா... மேடையில வெச்சு... சுட்டு கொன்ன
க.''

''அப்படி கொலை செஞ்சவங்க... ஸ்டேட்மெண்
தாங்க இந்தக் கொலையை பண்ணலைன்னு ஏன் சொ
ணும்...?''

''தப்பிக்கத்தான்....''

''அவங்க தப்பிக்கணும்ன்னு நினைச்சிருந்தா இப்
பகிரங்கமா பப்ளிக் மேடையில வெச்சு கொலை பண்ண
ருக்க மாட்டாங்க... ரகசியமா அந்த ஜோதிமயானந்தா இ
கிற இடத்துக்கே போய் ஒரு ராத்திரி நேரத்துல - அவ
கொலை பண்ணியிருக்கலாமே...!''

விவேக் சப்பாத்தி மெல்வதை நிறுத்தினான்.

''என்ன யோசிக்கறீங்க...?''

''ஏதோ தட்டுப்படுது...''

''சப்பாத்தியிலா...?''

''இல்ல... கேஸ்ல...''

டெலிபோன் அடித்தது.

''போய் பாரு ரூபி... விஷ்ணுவா இருந்தா... உடனே
சொல்லு... ஜெயக்கொடி கேஸை கொஞ்சம் கழுவிப் பார்
லாம்.''

ரூபலா டைனிங் அறையிலிருந்து வெளிப்பட்டு அல
கொண்டிருந்த டெலிபோனைத் தொட்டு ரிஸீவ
எடுத்தான்.

''ஹலோ...''

''போலீஸ் கண்ட்ரோல் ரூமிலிருந்து பேசறோம்... மிஸ்டர் விவேக் ப்ளீஸ்...''

''ஒன் மினிட்...!'' - சொன்னவள் உட்பக்கம் பார்த்து குரல் கொடுத்தாள்.

''என்னங்க... போலீஸ் கண்ட்ரோல் ரூமிலிருந்து பேசறாங்க...''

விவேக் எழுந்து வந்து ரிஸீவரை வாங்கினான்.

''எஸ்...''

''ஸார்... ஸாரி டு ஸே திஸ்...''

''என்ன...?''

''க்ரைம் ப்ராஞ்ச் மிஸ்டர் விஷ்ணு இறந்துட்டார்...''

''எ... எ.. என்ன...?'' விவேக்கின் இருதயத்தில் ஒரு ஆணி கீறிக்கொண்டு போயிற்று...

''எஸ்... ஸார்... இருபது நிமிஷத்துக்கு முந்தி விஷ்ணு தன் வீட்ல படுத்து தூங்கிட்டிருந்தபோது - ஜன்னல் வழியா யாரோ பெட்ரோல் குண்டுகளை அவர் மேல வீசியிருக்காங்க... தகவல் கிடைச்சு போலீஸ் ஸ்பாட்டுக்கு போய் சேர்றதுக்குள்ளே - எல்லாம் முடிஞ்சுடுச்சு...''

விவேக்கின் காதோடு பொருத்தியிருந்த ரிசீவர் மெல்ல நழுவியது. இருதயத்துக்குள் ஒரு இரைச்சல் மெதுவாய் ஆரம்பித்து - பின் கொஞ்சம் கொஞ்சமாய் அதிகரித்தது.

## 8

விவேக்கும் ரூபலாவும் நீர் கோர்த்துக் கொண்ட விழிகளோடு - விஷ்ணுவின் வீட்டை நெருங்கியபோது - வீடு இன்னும் புகைந்து கொண்டிருந்தது. தெரு முழுக்க கும்பல். தீயணைக்கும் எஞ்சின் ஒன்று - புகைந்து கொண்டிருந்த வீட்டின் மேல் தண்ணீரை பீய்ச்சிக் கொண்டிருந்தார்கள். விஷ்ணுவின் பைக் மல்லாந்து தெரிந்தது.

அந்த ஏரியா பீட் இன்ஸ்பெக்டர் பாஸ்கரன் வேக வேகமாய் எதிர்பட்டு - சல்யூட் வைத்து - விவேக்கையும் ரூபலாவையும் உள்ளே கூட்டிப்போனார்.

''ப்ளீஸ்... கம்... திஸ் சைட் ஸார்...''

ஓரமாய் கூட்டிப் போனார்.

''பெட்ரோல் குண்டு வீசியவனை மடக்கிட்டீங்களா?''

''இல்ல... ஸார்... தப்பிச்சுட்டான்.''

''பார்த்தது யாரு...?''

''பக்கத்து வீட்ல இருக்கிற ஒரு பெரியவர். சைக்ல வந்து வீசிட்டு போயிருக்கான்.''

''பாடி...?''

''கம்ப்ளீட்டா எரிஞ்சு கருகி போயிருச்சு ஸார்... வீடு பூராவுமே பெட்ரோல் வெடிகுண்டுகள். குண்டுகளில் நிரம்பியிருந்த பெட்ரோல் பரவலா சிதறி தீப்பிடிச்சிருக்கு...''

சுவரோரமாய் உடல் போர்த்தப்பட்ட நிலையில் தெரிய - பக்கத்தில் நின்றிருந்த கான்ஸ்டபிள் - துணியை விலக்கினார்.

முழுவதுமாய் வெந்து கருகிப்போன உடல்.

'அழகான விஷ்ணுவா இது...?'

''கடவுளே...!''

ரூபலா கர்ச்சீப்பால் வாயைப் பொத்திக் கொண்டு அழ விவேக் கண்ணில் சேறிய அழுகையை அடக்கினான்.

'விஷ்ணு...!'

'போலீஸ் துறைக்கு நீ செய்ய வேண்டிய எவ்வளவோ காரியங்கள் இருக்கு...! அதுக்குள்ளே உனக்கு இப்படியொரு முடிவா...?'

வெந்து கரிக்கட்டையாய் கிடக்கும் - விஷ்ணுவின் உடலை பார்க்க முடியாமல் - வெளியே வந்தான் விவேக். இன்ஸ்பெக்டர் பாஸ்கரனும் பின் தொடர்ந்து வந்தார்.

''பெட்ரோல் குண்டு வீசிய ஆளைப் பார்த்த அந்தப் பெரியவர் யார்...?''

''பக்கத்து வீட்டில் இருக்கார் ஸார்...''

''கூட்டிட்டு வாங்க...''

இன்ஸ்பெக்டர் போய் கூட்டிக் கொண்டு வந்தார். அறுபது வயது பெரியவர். ஒடிசலான தேகம். கழுத்திலும் முன் பக்க வழுக்கையிலும் வியர்த்திருந்தார். உடம்பில் பனியனும் நாலு முழ வேஷ்டியும். கும்பிட்டார்.

விவேக் கேட்டான்.

''உங்க பேரு...''

''வையாபுரி...''

''ஜன்னல் வழியே பெட்ரோல் குண்டு வீசியவனை நீங்க பார்த்தீங்களா...?''

''ஆமா...''

''ஆள் எப்படியிருந்தான்...?''

''இருட்டுல அடையாளம் தெரியலைங்க... ஆள் பைக்ல வந்தான். வண்டியை ஆஃப் பண்ணாமே ஸ்டாண்ட் போட்டு நிறுத்திட்டு - தோளில் மாட்டியிருந்த ஒரு பையை எடுத்து கிட்டு - சுத்தும் முத்தும் பார்த்துகிட்டே ஜன்னல் பக்கமா போனான். அவன் என்ன பண்றான்னு பார்த்துட்டு இருக்கும் போதே - பைக்குள்ளே கையைவிட்டு 'மளமள'ன்னு எதையோ எடுத்து ஜன்னல் வழியே வீசிட்டு - பைக்குக்கு ஓடிவந்து - உடனே கிளப்பிகிட்டு போயிட்டான். அடுத்த சில விநாடிகள்ல அந்த வீட்டுக்குள்ளேயிருந்து வெடிச்சத்தமும் - அலறல் சத்தமும் கேட்டது. தொடர்ந்து தீ ஜ்வாலை. வெடிச் சத்தத்தைக் கேட்டு தெருவே கூடிடுச்சு...''

''பெட்ரோல் குண்டு வீசின ஆளை நீங்க சரியாக பார்க்கலை...?''

''இல்லை... வந்த ஆள் அரை நிமிஷம் கூட நிக்கலைங்க. அதுக்குள்ளே பெட்ரோல் குண்டை வீசிட்டு போயிட்டான்...''

பெரியவர் சொல்லிக் கொண்டிருக்கும்போதே - தெருமுனையில் அந்த வாகனம் ஹெட்லைட் வெளிச்சங்களோடு திரும்பியது. பக்கத்தில் வந்தது.

டாக்ஸி.

விவேக்கிற்கு பக்கத்தில் வந்ததும்-

நின்றது.

டாக்ஸியின் கதவைத் திறந்து கொண்டு இறங்கினான் விஷ்ணு.

கேட்டான்.

''ஸார்... இங்கே என்ன கூட்டம்...? என் வீட்டுக்கு என்ன ஆச்சு...? ஏன் புகையுது...?''

# 9

விவேக் சந்தோஷத்தில் தத்தளித்தான். மற்றவர்கள் ஸ்தம்பித்து திகைக்க - பாய்ந்து சென்று விஷ்ணுவைக் கட்டிப் பிடித்துக் கொண்டான்.

''வி... வி... விஷ்ணு... நீ.. நீயா...?''

''ஸ... ஸார்...! ஏன் இப்படி எமோஷனல் ஆயிட்டீங்க... வாட் ஹேப்பண்ட்...?''

''விஷ்ணு! நீ எங்கே போயிருந்தே...?''

''மணலி வரைக்கும் போயிருந்தேன் ஸார். பைக் ரிப்பேர். அதான் அதை இங்கேயே வெச்சுட்டு டாக்ஸியில போயிட்டு வந்தேன்... ஏன் ஸார். வாட் ஈஸ் ராங்க்...?''

''வீட்டுக்குள்ளே இருந்தது யாரு...?''

''டெல்லியிலிருந்து வந்த என்னோட ஃப்ரெண்ட்... ஒரு இண்டர்வ்யூவுக்காக சாயந்தரம்தான் வந்தான்.''

''மை குட்னஸ்...!''

''ஸ... ஸார்... இங்கே என்ன நடந்தது...?''

விவேக் விபரம் சொன்னதும் - அதிர்ந்து போன விஷ்ணு உள்ளே போய் - டெல்லி நண்பனின் உடலைப் பார்த்துவிட்டு கண்ணீரில் மிதக்கும் விழிகளோடு வந்தான். குரல் தழுதழுத்தான்.

''ஸ... ஸார்... யார்... இப்படி... எதுக்காக... செஞ்சாங்ன்னு எனக்கு புரியலை...''

''வா... இப்படி...''

விவேக் விஷ்ணுவை தனியே கூட்டிப் போனான். தள்ளி நிறுத்தி வைத்துக் கொண்டு கேட்டான்.

''ஜெயக்கொடி கேஸ்ல தீவிரமா இருக்கியா...?''

''ஆமா... ஸார்...''

''கடந்த மூணு நாள்ல என்னென்ன ஸ்டெப்ஸ் எடுத்தே...?''

''முதல் நாள்... போலீஸ் டாக்குமெண்ட்ரி டிபார்ட்மெண்ட்டுக்கு போய் ஜோதிமயானந்தா கொலைக் கேஸ் ஹிஸ்டரி காப்பியை வாங்கிட்டு வந்து படிச்சேன்.''

''சரி... ரெண்டாவது நாள்...?''

''கேஸை முதல் முதலா ஹேண்டில் பண்ணின இன்ஸ்பெக்டர் பன்னீர் செல்வத்தைப் பார்த்தேன்.''

விஷ்ணுவின் கண்களில் இறந்துபோன அந்த நண்பனுக்காக கண்ணீர் - தளும்ப - விவேக் அவன் தோளில் கையை வைத்தான்.

''இந்த நிமிஷத்திலிருந்து ஜோதிமயானந்தா கொலை விவகாரத்தை நீயும் நானும் சேர்ந்து டீல் பண்ணப் போறோம். நம்முடைய நடவடிக்கைகள் எல்லாமே அவுட் ஆஃப் ரிக்கார்ட்லா இருக்கணும்... போலீஸ் டிபார்ட்மெண்ட்டுக்கு எதுவும் தெரிய வேண்டாம். கேஸ் ஃபைல் காப்பி வெச்சிருக்கியா...?''

''வெச்சிருக்கேன் ஸார்...''

''குடு...''

## 10

ஜோதிமயானந்த ஆஸ்ரமம், சென்னை நகர பரபரப்புகளை விட்டு விலகி - செங்கல்பட்டு போகும் சாலையில்

மெயின் ரோட்டைவிட்டு விலகி - ஆலமரங்கள் சூழ்ந்த இடத்தில் காவிநிற டிஸ்டெம்பர் பூச்சோடு பெரிய கட்டிடமாய் உட்கார்ந்திருந்தது. ஆஸ்ரமத்துக்கு பக்கத்திலேயே ஒரு கோயில் - உச்சியில் தங்க நிற கலசம்.

ஆலமரத்தின் நிழலில் - காவியுடை ஆட்கள் மழித்த தலைகளோடு சம்மணமிட்டு உட்கார்ந்திருக்க - எதிரில் வெள்ளை அங்கி அணிந்த ஒரு உயரமான மனிதர் வெண்கலக் குரலில் பேசிக் கொண்டிருந்தார்.

''.... ஒருவர் வருந்தும்படி நாம் நடந்து கொண்டால் அவரிடம் மனப்பூர்வமாக மன்னிப்பு கேட்க வேண்டியது மிக மிக அவசியம். 'நான் வருந்துகிறேன்' என்று கூற சிரமப்பட வேண்டியிருந்தாலும் உதாரணமாக அதற்காக நூறு மைல் நடந்து செல்ல வேண்டி வந்தாலும் விரும்பி அதை செய்ய வேண்டும். வருத்தம் தெரிவித்ததை மற்றவர் அலட்சியம் செய்தாலும் பொருட்படுத்த வேண்டாம். நீங்கள் ஒரு வெண்ண மலரைத் தந்தீர்கள். அவர் மண்ணில் வீசி எறிந்தால் அவரே முட்டாளாகிறார். அப்படி வருத்தம் தெரிவித்து உங்கள் மனபாரத்தை நீங்கள் இறக்காவிட்டால் அந்த நினைவுகள் உங்களுடைய தியானத்திற்கு இடையூறாக அமையும். தன் ஆன்ம சக்தியை தட்டி எழுப்ப தவறுகளுக்கு மனப்பூர்வமாக மன்னிப்பு கேட்பதே சிறந்த வழியாகும்... ஆன்மா ஓய்வு எடுக்கும் வீடாக உள்ளது மனம். இச்சமயம் ஆன்மா அடங்கி வெளித்தூண்டுதலுக்கு உட்படாமல் ஆர்வமோ அக்கறையோ காட்டாமல் இருக்கும். ஒவ்வொரு ஆன்மாவுக்கும் ஒவ்வொரு...''

வெள்ளை அங்கி அணிந்திருந்தவரின் பேச்சு சட்டென நின்றது. காரணம் பக்கவாட்டில் வந்து நின்ற ஒரு காவியுடை ஆள்.

புருவங்களை உயர்த்தினார்.

''என்ன...?''

''போலீஸிலிருந்து இரண்டு பேர் வந்து அலுவலக அறையில் காத்திருக்கிறார்கள்.''

''எதற்கு...?''

''தெரியவில்லை. உங்களோடு பேச வேண்டுமாம்...''

''இது பிரசங்க நேரம் என்று சொன்னாயா?''

''சொன்னேன். காத்திருந்து பார்த்துவிட்டு போகிறோம் என்று சொல்கிறார்கள்.''

''பதினைந்து நிமிஷம் காத்திருக்கச் சொல். எலுமிச்ச ரசமோ நீர்மோரோ எடுத்துக் கொடு...''

காவியுடை ஆள் பவ்யமாய் தலையாட்டிவிட்டு நகர்

நான். கொஞ்ச தூரம் தள்ளியிருந்த - அலுவலகக் கட்டிடத்திற் தள் நுழைய உள்ளே - விவேக்கும் விஷ்ணுவும் நாற்காலிக ளில் சாய்ந்திருந்தார்கள்.

"பவானந்தா சுவாமிகள் பிரசங்க வகுப்பை முடித்துக் கொண்டு பதினைந்து நிமிஷத்திற்குள் வந்து விடுவார்."

"வரட்டும்... வரட்டும்..."

"இன்னும் அஞ்சே நிமிஷத்தில் இங்கே வரப்போறார் பாரேன்."

விவேக் சொல்லி வாயை மூடவில்லை.

பவானந்தா வெள்ளை அங்கி காற்றில் பறக்க அலுவலகக் கட்டிடத்தை நோக்கி வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

"எப்படி ஸார்...?"

"சைக்காலஜி...! போலீஸ்ங்கிற வார்த்தையைக் காதுல கேட்டுட்டாலே சரி... யார்க்கும் எந்த வேலையும் ஓடாது..."

அந்த நிமிஷம் முடிவதற்குள் பவானந்தா உள்ளே வந்தார். விவேக்கும் விஷ்ணுவும் எழுந்தார்கள்.

"வணக்கம்."

பவானந்தா இரண்டு கைகளையும் உயர்த்தி ஆசிர்வதித்தார். "நன்றாய் இருப்பீர்கள்...!"

"உங்க பிரசங்க நேரத்தை கெடுத்துட்டோம்..."

"பரவாயில்லை... உட்காருங்கள்... ஏதாவது அருந்தினீர்களா...?"

"அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்... உங்களைப் பார்த்து ஒரு பத்து நிமிஷம் பேசிட்டு போகத்தான் வந்தோம்..."

பவானந்தா சாய்ந்து உட்கார்ந்து கொண்டார்.

"பேசலாமே..."

விவேக் நாற்காலியின் நுனிக்கு வந்து பேச்சை ஆரம்பித்தான். "இரண்டு வருஷங்களுக்கு முன்னால் கன்யா குருகுல மேடையில் ஜோதிமயானந்த சுவாமிகள் சுடப்பட்டு இறந்தப்போ நீங்களும் அந்த மேடையில் இருந்தீங்களா...?"

"ஆமாம்... ஜோதிமயானந்தாவுக்கு பக்கத்திலேயே உட்கார்ந்து இருந்தேன். அது ஒரு மிகப் பெரிய துரதிர்ஷ்ட சம்பவம்... இப்போது நினைத்தாலும் உடல் தன்னிச்சையாய் பதறுகிறது."

"ஜோதிமயானந்தாவை சுட்டுக் கொலை பண்ணின ஜெயக்கொடி, ரத்னமாலாவை - அந்த கொலைச் சம்பவம் நடந்ததுக்கு முந்தி நீங்க பார்த்திருக்கீங்களா...?"

''இல்லை...''

''இந்த ஆஸ்ரமத்திற்கு வந்திருக்கிறார்களா...?''

''தெரியாது...! விசேஷ நாட்களில் வழிபாட்டுக்கா மாதர் சங்கத்தைச் சேர்ந்த பெண்கள் திருவிளக்கு பூஜை நட வருவார்கள். அந்த சமயத்தில் அவர்களும் வந்திருக்கலாம்.. சொன்ன பவானந்தா நெற்றியில் குழப்ப முடிச்சோடு கே டார்.

''இரண்டு வருடங்களுக்கு - முன்னால் நடந்த சம்பவ இது. வழக்கு விசாரணை முடிந்து - அந்த இரண்டு பெண் களுக்கு கோர்ட்டில் தூக்குத் தண்டனையும் விதித்தாயிற்று. தண் டனையும் நிறைவேறப்பட இருக்கிறது. இப்போது எதற்கா இந்த புதிய விசாரணை.''

''ஜெயக்கொடி தூக்குதண்டனை நிறைவேற்றப்ப இருந்த கடைசி நான்கு நிமிஷங்களில் தப்பிச்சுகிட்ட விபர உங்களுக்கு தெரியுமா...?''

''தெரியும்... பேப்பரில் பார்த்தேன்... ஜனாதிபதி இறந் போனதால் தண்டனையை ஒரு வாரம் தள்ளி வைத்திருக் றார்கள்.''

''அது முன்பு. இப்போது மறுதேதி குறிப்பிடப்படாம தண்டனையை தள்ளி வைத்திருக்கிறார்கள்.''

''எப்படியும் நிறைவேற்றப்படப் போகிற தண்டனை தானே...? இந்த வாரம் இல்லையென்றால் அடுத்த மாத தண்டனையை நிறைவேற்றப் போகிறார்கள். தப்பு செய்தவ கள் தண்டனையை அனுபவித்துதானே ஆகவேண்டும்...''

''அந்தப் பெண்களோட ஸ்டேட்மெண்ட்டைப் பார் கும்போது அவங்க அந்தக் கொலையை பண்ணியிருக்க மாட் டாங்களோன்னு இப்ப மனசுக்கு படுது...''

பவானந்தாவின் முகத்தில் கோபம் பரவியது.

சிடுசிடுத்தார்.

''என்ன சொல்கிறீர்கள் நீங்கள்...? கடவுள் வாழ்த் பாடிக் கொண்டிருக்கும்போதே - திடீரென்று - மார்புப் ப திக்குள் மறைத்து வைத்திருந்த துப்பாக்கிகளை எடுத்து கண்ணிமைக்கிற நேரத்திற்குள் ஜோதிமயானந்தாவை சுட்டு கொன்றார்கள் அந்தப் பெண்கள். கொன்றது மட்டும் இல்லா மல் ஜெயக்கொடி என்கிற அந்தப் பெண் மைக்கைப் பிடித்து கொண்டு - ஜோதிமயானந்தத்தை ஏன் கொலை செய்தோ என்பதற்கு காரணத்தையும் சொல்லியிருக்கிறாள்...''

விவேக் குறுக்கிட்டான்.

''நீங்கள் சொல்வது சரிதான். சம்பவமும் அப்படித்தா நடந்திருக்கிறது. ஆனால்...''

''ஆனால்...?''

''ஜெயக்கொடி - ரத்னமாலா என்கிற அந்த இரவு பெண்களும் தங்களுடைய ஸ்டேட்மெண்டில் 'எங்களுக்கு அந்தக் கொலைக்கும் சம்பந்தமில்லை. எங்கள் கைகளு துப்பாக்கிகள் எப்படி வந்தது என்றே தெரியவில்லை. கள் பெரிதும் மதிக்கிற ஜோதிமயானந்தாவை எதற்காக டுக் கொன்றோம் என்றும் புரியவில்லை. எங்களுக்கு குழப்பமாக இருக்கிறது... நாங்கள் நிரபராதிகள்' எ சொல்லியிருக்கிறார்கள்.''

பவானந்தா புன்னகைத்தார்.

''இப்போதுதான் களத்தில் இறங்கியிருக்கிறோம் முதன் முதலாய் உங்களிடம் விசாரணையை ஆரம்பித்து இரு கிறோம்... நாங்கள் கேட்கும் கேள்விகளுக்கு நீங்கள் உண்ை யான தகவல்களைக் கொடுத்து உதவ வேண்டும்...''

''தாராளமாய்....''

பவானந்தா தன் பளீரென்ற வழுக்கையை இரண்டு கை ளாலும் வாரிவிட்டுக் கொண்டார்.

# 11

கன்யா குருகுலம்.

தாளாளர் நாகரத்தினம்மாள் தன் மூக்குக் கண்ணாடியை கழற்றி மேஜையின் மேல் கவனமாய் வைத்துவிட்டு மோ யைத் தாங்கிக் கொண்டாள். எதிரே விவேக், விஷ்ணு.

''இந்த கன்யா குருகுலத்திலேயே பயந்த சுபாவமுள்ள பெ கள் யார்ன்னா... அது ஜெயக்கொடியும், ரத்னமாலாவும்தா சம்பவம் நடந்த அன்னிக்கு அவங்களுக்கு எப்படி அவ்வ துணிச்சல் வந்ததுன்னு இன்னமும் எனக்கு ஆச்சர்யமாயி கு.'' விவேக் கேட்டான். ''வழக்கமா பிரேயர் பாட்டு ப றது யாரு...?''

''கன்யா குரு குலத்தில் எந்த மீட்டிங் நடந்தாலும் ச ப்ரேயர் பாடறது ஜெயக்கொடியும் ரத்னமாலாவும்தா ரெண்டு பேர்க்குமே ஸ்வீட் வாய்ஸ்...''

''இங்கே இருக்கிற எல்லாப் பெண்களுமே அநாதை தானே?''

''ஆமா...''

''ஜெயக்கொடி, ரத்னமாலாவோட பேக் க்ரௌ பற்றி ஏதாவது தெரியுமா...?''

''தெரியாது... கைக்குழந்தைகளாய் இருக்கும்போ அநாதை விடுதியில் சேர்க்கப்பட்டவங்க. பத்து வயதான கன்யா குருகுலத்துக்கு வந்துடுவாங்க...''

''இந்த குருகுலத்தில் இருக்கிற பெண்களுக்கு சட்ட திட்ங்கள் விதிமுறைகள் ஏதாவது இருக்கா...?''

''இருக்கு...! இங்கே இருக்கிற ஒவ்வொரு பெண்ணும் ாவது ஒரு கைத்தொழிலை கத்துகிட்டு உழைச்சாகணும். வங்க தயார் பண்ணின பொருள்களை அவங்களே பளியே கொண்டுபோய் வித்து பணம் கொண்டு வரணும்.''

''வெளியே போய் வேலை பார்க்கக்கூடாதா...?''

''கூடாது... கைத்தொழில்தான் பண்ணணும். தொழிக்கு வேண்டிய மூலாதாரப் பொருட்களை அரசாங்கம் டுக்கும். அதை பொருள்களாக்கி வெளி மார்க்கெட்டில் த்து - நாங்க லாபத்தை எடுத்துகிட்டு அரசாங்கத்துக்கு சேர பண்டிய பணத்தை குடுத்துடுவோம்...''

''ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் இங்கே என்ன கைத் நாழில் பண்ணிட்டிருந்தாங்க...?''

''பினாயில் ப்ராடக்ட்ஸ்... தயாரிக்கிறதும் - வெளியே பாய் ஆர்டர் பிடிச்சு சப்ளை பண்றதும் அவங்க வேலை. ந்த வேலையில திறமையா செயல்பட்டுகிட்டு இருந் ங்க...''

''இங்கே வேலை பார்க்கிற பெண்களுக்கு விடுமுறை ண்டா...?''

''உண்டு. ஞாயிற்றுக்கிழமையன்னிக்கு அவங்களுக்கு லையிலிருந்தே ஃப்ரீ. பத்து மணியிலிருந்து சாயந்தரம் ஆறு ணி வரைக்கும் வெளியே போய்ட்டு வரலாம்.''

''ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் ஞாயிற்றுக்கிழமை ன்னிக்கு வெளியே போவாங்களா...?''

''ம்... போவாங்க... பெரும்பாலும் சினிமா...''

''ரெண்டு பேரும் ஒண்ணா சேர்ந்துதான் வெளியே பாவாங்க...?''

''ஆமா... ஒருத்தர்க்கொருத்தர் பிரிஞ்சு இருந்ததை நான் ார்த்ததில்லை...''

மேஜைமேல் இருந்த டெலிபோன் ஒலித்தது. நாகரத்தி ம்மாள் ''எக்ஸ்க்யூஸ்மீ...'' சொல்லிவிட்டு ரிஸீவரை டுத்து காதுக்கு கொடுத்து செவிமடுத்துவிட்டு - விவேக்கி ம் நீட்டினாள். ''ஃபார் யூ...''

விவேக் வாங்கினான்.

''எஸ்...''

மறுமுனையில் டி.ஜி.பி. பேசினார்.

''மிஸ்டர் விவேக்... ஜோதிமயானந்தா மர்டர் கேஸை

ணிட்டிருக்கிறதாய் கேள்விப்பட்டேன்.''

''யூ... ஆர்... கரெக்ட் ஸார்...''

''உங்களுக்கு அந்த ஆர்ட்ரை இஷ்யூ பண்ணின யாரு...?''

''யாரும் பண்ணலை ஸார்...''

''தென்...? எப்படி நீங்க கேஸை ரீ- ஓப்பன் பண்ண லாம்!''

''ஸார்... திஸ் ஈஸ் நாட் அஃபிஷியல். நானும் விஷ்ணு வும் அன்அஃபிஷியலா ஜோதிமயானந்தா மர்டர் கேஸை கிள றிப் பார்த்துட்டு இருக்கோம். விஷ்ணுவும் நானும் லீவ்லதான் இருக்கோம்... பர்ஸனல் இண்ட்ரஸ்ட் எடுத்து இந்த கேஸை பார்த்துட்டு இருக்கோம்...''

''மிஸ்டர் விவேக்...! உங்களுக்கு தெரியாதது ஒன்று மில்லை. சி.பி.ஐ. அந்த கேஸை ஹேண்டில் பண்ணி மங்களம் பாடியாச்சு... மூணு கோர்ட்டும் அந்த ரெண்டு பெண்களை தூக்குல போடணும்னு முத்திரை குத்தியிருக்கு... இ விட்ட எக்கச்சக்கம். ஒண்ணும் பண்ண முடியாது...''

''ஆரம்பத்துல நானும் அப்படித்தான் ஸார் நினைச்சேன் ஆனா அந்தக் கேஸ்ல இண்ட்ரஸ்ட் காட்ட ஆரம்பிச்ச விஷ்ணு வோட உயிர்க்கு யாரோ குறி வெச்சதை பார்த்த பின்னாடி ஜோதிமயானந்தா கேஸ்ல ஏதோ குளறுபடி இருக்குன்னு தெரிஞ்சுகிட்டேன்...''

''மிஸ்டர் விவேக்...! விஷ்ணு வீட்டுக்குள்ளே பெட் ரோல் குண்டு வீசியவனைப் பத்தி சொல்றீங்க... அது விஷ்ணு வுக்கு வைக்கப்பட்ட குறின்னு உங்களுக்கு எப்படி தெரி யும்...? அது விஷ்ணுவோட டெல்லி ஃப்ரண்ட்டுக்கு வெச்ச குறியா கூட இருக்கலாம் இல்லையா...?''

''சம்பவம் நடந்திருக்கிற விதத்தைப் பார்க்கும்போது அப்படி தோணலை ஸார்...''

''விவேக்...! இந்தக் கேஸ்ல நீங்க இண்ட்ரஸ்ட் காட்டி தான் ஆகணுமா...? டெல்லி சி.பி.ஐ. அதிகாரிகளுக்கு இதன் காரணமா அதிருப்தி ஏற்படலாம்... ப்ளீஸ் ட்ரை டு அண்டர்ஸ் டாண்ட் த சிச்சுவேஷன்.''

''ஸாரி... ஸார்... இந்த ஜோதிமயானந்த மர்டர் கேஸில் கொஞ்சம் குளறுபடி இருக்கு. அந்தப் பெண்கள் ஜெயக் கொடி, ரத்னமாலா உண்மையாவே குற்றவாளிகளாய் இருந் தால் அவங்க தண்டிக்கப்படறது நியாயம். ஒரு வேளை அவங்க நிரபராதிகளாய் இருந்துட்டா...?''

''கோர்ட்டோட ஜட்ஜ்மெண்ட் தப்பாயிருக்கும்னு சொல்ல வர்றீங்களா?''

''ஒருவேளை...''

''மிஸ்டர் விவேக்...! ஜோதிமயானந்தா மர்டர் கேஸை ஹேண்டில் பண்றநிற உங்களுக்கு... டெல்லி மூலமா சில பிரச்னைகள் வரலாம். யூ ஹேவ் டு ஃபேஸ் த ப்ராப்ளம்ஸ்...''

''டோண்ட் ஒர்ரி ஸார்... ஐ வில் ஃபேஸ் த ப்ராளம்ஸ்.''

''உங்க இஷ்டம்...''

டி.ஜி.பி. மறுமுனையில் ரிஸீவரை வைத்துவிட, விவேக்கும் புன்னகையோடு ரிஸீவரை வைத்துவிட்டு விஷ்ணுவை ஏறிட்டான். ''டெல்லி டி.ஜி.பி.யை நெருக்கியிருக்கு... போன் பண்ணிட்டார்...''

''நாம இங்கே இருக்கிறது... அவர்க்கு எப்படி ஸார் தெரியும்...?''

''எல்லாம் டெல்லி வேலை...'' சிரித்த விவேக் நாகரத்தினம்மாளிடம் திரும்பினான்.

''மேடம்...! இந்த கன்யா குருகுலத்தில் இருந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் தூக்கு தண்டனையிலிருந்து தப்பிச்சா உங்களுக்கு சந்தோஷம்தானே?''

''நிச்சயமாய்...! இந்தக் கன்யா குருகுலத்தில் சிந்தப்பட்டிருக்கிற ரத்தக் கறை சுத்தமா துடைக்கப்பட்டா அதைவிட பெரிய சந்தோஷம் வேற எதுவும் எனக்குக் கிடையாது.''

''அப்படீன்னா... அந்த விழாவோட வீடியோ கேஸட்டை எங்ககிட்ட ஒரு ரெண்டு நாளைக்குத் தரணும்...''

''எந்த வீடியோ காஸட்டை...?''

''அன்னிக்கு ஜோதிமயானந்தா... உங்க கன்னியா குரு குல விழாவில கலந்துகிட்டாரே... அப்ப வீடியோ கவரேஜ் பண்ணியிருப்பீங்கள்ள...?''

''ஆமா...''

''அந்த காஸட்...! போலீஸ் டிபார்ட்மெண்ட்ல உங்க காஸட்டோட காப்பி ஒண்ணு இருக்கு... அதை பார்க்கக் கேட்டோம். தர முடியாதுன்னு சொல்லிட்டாங்க... காரணம் போலீஸ் டிபார்ட்மெண்ட் இந்தக் கேஸை ரீ - ஒப்பன் பண்ணி - விசாரணையை மேற்கொள்றதுல சம்மதம் இல்லை.''

''நோ ப்ராப்ளம். அந்த காஸட்டை நான் உங்களுக்குத் தர்றேன்... ஜோதிமயானந்தா சுடப்பட்டதும் - ஜெயக்கொடி கொலை பண்ணினதுக்கான காரணத்தை மைக்கில் பேசியிருக்கிறதும் அதுல பதிவாகியிருக்கு... வாங்க... தர்றேன்...'' நாகரத்தினம்மாள் எழுந்து பக்கத்து அறையை நோக்கி போக - விவேக்கும் விஷ்ணுவும் அவளை பின் தொடர்ந்தார்கள்.

## 12

விவேக் வீடு.

டெக்கின் வாய்க்குள் காஸெட் சுழன்று கொண்டிருக்க டி.வி. திரையில் ஜோதிமயானந்தா மேடையேறிக் கொண்டிருந்தார். பின்னணியில் ஜெய ஜெய சங்கர கோஷம். வாழ்த்தொலிகள்.

விவேக் - ரூபலா - விஷ்ணு மூன்றுபேரும் பார்வைகளை கூர்மையாக்க - விவேக் சொன்னான்.

''இந்த நிமிஷங்கள்தான் நமக்கு முக்கியம்... விழா மேடை முன் கூடியிருக்கிற கும்பலை கவனிக்கணும். அப்புறம் மேடையில் இருக்கிற ஆட்களை ஸ்டடி பண்ணிகிட்டே - ஜெயக்கொடி, ரத்னமாலாவை அப்ஸர்வ் பண்ணணும்... பி... அலர்ட்...'' வாழ்த்து கோஷங்களுக்கு மத்தியில் - திரையில் ஜோதிமயானந்தாவின் முகம் புன்னகையாய் தெரிய - மைக்கில் நாகரத்தினம்மாள் பேசிக் கொண்டிருந்தாள்.

''இப்போது கடவுள் வாழ்த்து. நமது குருகுலத்தைச் சேர்ந்த பெண்கள் ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் பாடுவார்கள்.''

மேடைக்கு முன்புறமாய் உட்கார்ந்திருந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் எழுந்து - மேடையேறி - மார்புக்கு குறுக்காய் கைகளைக் கட்டிக்கொண்டு மைக்குக்கு முன்பாய் வந்து நின்றார்கள். ஒரே விநாடியில் வாய்களைத் திறந்தார்கள்.

விவேக்கின் பார்வை அவர்கள் மேல் கூர்மையாய் படிந்திருந்தது. பாடினார்கள். ''கைத்தல நிறைகனி அப்பமொடு அவல் பொரி கப்பிய கரிமுக ,எடி பேணி கற்றிடும் அடியவர் புத்தியில் உறைபவர் கற்பகம் என வினை கடிதேகும். மத்தமும் மதியமும் வைத்திடும் அரண்மகன் மற்பொரு திரள்புய மதயானை மத்தள வயிறனை உத்தமி புதல்வனை மட்டவிழ் மலர் கொடு பணிவேனே... முத்தமிழ் உடை...''

பாட்டு சட்டென்று நின்றது. பாடிக் கொண்டிருந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் பாடுவதை நிறுத்திவிட்டு - ஜோதிமயானந்த சுவாமிகளிடம் திரும்பினார்கள். நாகரத்தினம்மாள் பதட்டப்பட்டாள். ''ம்... கடவுள் வாழ்த்தை பாடுங்க... ஏன் பாட்டை நிறுத்திட்டீங்க...''

அவள் கேட்டுக் கொண்டிருக்கும்போதே - ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் தங்கள் மார்பு பகுதிக்குள் மறைத்து வைத்திருந்த ரிவால்வர்களை எடுத்தார்கள். சுட்டார்கள்.

''ட்ட்ட்டுமீல்...''

ஜோதிமயானந்தா ரத்தமயமாய் - நாற்காலியை உருட்டிக்

விவேக், விஷ்ணு, ரூபலா மூன்று பேரும் டி.வி. திரையையே உன்னிப்பாய் பார்த்துக் கொண்டிருக்க - ஜெயக்கொடி வானத்தை நோக்கி துப்பாக்கியால் சுட்டுவிட்டு மைக்கைப் பிடித்துக் கொண்டு கர்ஜித்தாள்.

''யாரும் பக்கத்தில் வரக்கூடாது. நாங்கள் செய்தது கொலையில்லை. வேள்வி. ஜோதிமயானந்தாவை நீங்கள் மகாத்மாவாய் நினைக்கிறீர்கள். அது தவறு... எங்களைப் பொறுத்தவரைக்கும் அந்த ஆள் மனிதனே இல்லை. காவி உடை உடுத்திய வேஷதாரி. கபடதாரி, பகலில் உத்தமன். இரவில் உன்மத்தன். அவன் கடவுள் சேவைக்குத் தன்னை அர்பணித்துக் கொண்டதாய் நீங்கள் நினைக்கிறீர்கள். அது தவறு. அவனுக்கு வேண்டியதெல்லாம் பாவைகள்தான். இவனுடைய காமப்பசிக்கு இரையான கன்னிப் பெண்கள் ஏராளம். பூஜை விளக்காய் இருக்கும் குடும்பப் பெண்கள் மேல் இவன் பார்வை பட்டால் போதும், அவர்கள் தெருவிளக்காகி விடுவார்கள். இந்த காமாந்தகன் இந்த பூமியில் இருக்கக்கூடாது. இந்தப் புனிதமான பாரத மண்ணில் உலவுகின்ற காற்றை சுவாசிக்கக்கூடாது. இவன் பாதங்கள் பூமியில் படக்கூடாது. நானும் ரத்னமாலாவும் ஒரு மகத்தான பணியை செய்து முடித்திருக்கிறோம். அந்த நிம்மதியோடு சாகிறோம்...''

சொன்னவள் தன் நெற்றிப் பொட்டில் துப்பாக்கியை வைத்துக் கொள்ள - ரத்னமாலாவும் நெற்றிக்கு துப்பாக்கியைக் கொடுத்தாள்.

ட்ரிக்கர்களை அழுத்துவதற்குள் - ஜோதிமயானந்தாவின் சீடர்கள் பாய்ந்து மேடைமேல் ஏறி அவர்களுடைய துப்பாக்கிகளைத் தட்டி விட்டார்கள். ''டேய்... விடுங்கடா... நாங்க சாகணும். சட்டம் தர்ற தண்டனை எங்களுக்கு வேண்டாம். எங்க உயிரைப் பறிக்க உங்க சட்டத்துக்கு உரிமையில்லை...''

காஸட் முடிந்து போயிருக்க - டி.வி. திரையில் புள்ளிகள் உற்பத்தியாயிற்று.

விவேக் விஷ்ணுவை ஏறிட்டான். ''என்ன அப்ஸர்வ் பண்ணினியா...?''

''பண்ணினேன் ஸார்...''

''ஏதாவது தட்டுப்பட்டதா...?''

''நத்திங் ஸார்...''

''ரூபலா... உனக்கு...?''

''இது ஒரு பர்ஃபெக்ட் அண்ட் ப்ரீபிளான்ட் மர்டர். அந்த இரண்டு பொண்ணுகளும் திட்டம் போட்டுகிட்டு வந்து - திறமையா துல்லியமா ஜோதிமயானந்தாவை தீர்த்துக் கட்டியிருக்காங்க... ரெண்டு பேரும் தூக்குல தொங்க வேண்டியது

தியாயம்தான்...''

விவேக் புன்னகைத்தான்.

''என்ன சிரிக்கறீங்க...?''

''இப்ப பார்த்த காஸட்ல ஒரு விஷயம் எனக்கு வித்தியாசமா பட்டது...''

''என்ன...?''

''மறுபடியும் காஸட்டை ரிவைண்ட் பண்ணி பாருங்க.''

விஷ்ணு ரிவைண்ட் பண்ணி ப்ளே பட்டனைத் தட்ட காஸட் முதலிலிருந்து நிகழ்ச்சிகளை ஆரம்பித்தது. ரூபலாவும் விஷ்ணுவும் உன்னிப்பாய் பார்க்க ஆரம்பித்தார்கள்.

ஐந்து நிமிஷத்தில் காஸட் முடிந்தது. விவேக் அதே புன்னகையோடு கேட்டான்.

''பிடிபடலையே ஸார்...'' விஷ்ணு சொல்ல, ரூபலாவும் உதட்டைப் பிதுக்கினாள்.

''வெரி புவர் அப்ஸர்வேஷன்...! ரெண்டு பேரும் தினசரி வல்லாரை கீரையும், வெண்டைக்காயும் பச்சையா சாப்டுட்டு வாங்க! விஷ்ணு காஸட்டை மறுபடியும் ஆன் பண்ணு...''

பண்ணினான்.

''கவனிங்க... விழா மேடைக்கு முன் பக்கமா உட்கார்ந்துட்டு இருக்கிற ஜெயக்கொடியையும் ரத்னமாலாவையும் உன்னிப்பா கவனிங்க... ரெண்டு பேர்களோட பார்வையும் ஒரே திசையில் இருக்கா...?''

''ஆமா...''

''ஜோதிமயானந்தா மேடையேறும் போதும் சரி... உட்காரும் போதும் சரி... அவங்க பார்வையில எந்த சலனமும் இல்லை...''

''அட... ஆமா...'' ரூபலா வியந்தாள்.

''மத்தவங்க ஹர ஹர சங்கரா... ஜெய ஜெய சங்கரா பாடும்போது இவங்க பாடறதில்லை... உதட்டுல கொஞ்சம் கூட அசைவில்லை...''

விஷ்ணுவின் நெற்றி சுருங்கியது.

''ஆமா... ஸார்...''

''மேடையில இப்ப யார் யார் இருக்காங்க...?''

''முதலில் பாலகுரு அடிகள் - அப்புறம்... ஜோதிமயானந்தா - பக்கத்தில் நாகரத்தினம்மாள். அவங்களுக்கு பக்கத்தில் பவானந்தா - பவானந்தாவுக்கு பக்கத்தில் - குருகுல காப்பாளர் ஜெயலட்சுமி. ஜெயலட்சுமிக்கு பக்கத்தில் குரு

குல டாக்டர் வனிதாமணி.''

''கரெக்ட்... இப்போ ஜெயக்கொடி, ரத்னமாலா ரெண்டு பேரோட பார்வைகளை கவனிங்க... அதாவது பார்வை போகும் பாதையை கவனிங்க...''

கவனித்தார்கள்.

ஜெயக்கொடி - ரத்னமாலாவின் இரு ஜோடி கண்கள் சுவாமி பவானந்தாவையே இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தன.

வாழ்த்துக் கோஷங்கள் அவர்களை அசைக்கவில்லை.

''ஸார்... ரெண்டு பேரும் பவானந்தாவையே ரொம்பவும் உன்னிப்பா பார்த்துட்டிருக்காங்க... கண்ணிமைகள் கூட அசையலை...''

''இதுதான் நான் பார்த்த வித்தியாசம். அங்கே கூடியிருக்கிற கூட்டம் பூராவும் ஜோதிமயானந்தாவோட முகத்தையே ஆர்வமா பார்த்துட்டிருக்கும்போது ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் மட்டும் பவானந்தாவை பார்த்துட்டு - ஏதோ கட்டளைக்காக காத்துட்டிருக்கிற மாதிரி தெரியலை...?''

''யூ... ஆர்... கரெக்ட் ஸார்...''

ரூபலா தன் மோவாயில் கையை வைத்தாள். ''அப்படியானா ஜோதிமயானந்தாவோட கொலைக்கு பவானந்தாதான் மூலகாரணம்...''

''விஷ்ணு! நீ ஒரு காரியம் பண்ணு...''

''என்ன ஸார்...?''

''இன்னிக்கு ராத்திரி பதினோரு மணிக்கு மேல் பின்பக்க சுவரேறி குதிச்சு ஆசிரமக் கட்டிடத்துக்குள்ளே போய்... ஆசிரமத்தோட சூழ்நிலையை அலசிட்டு வா... முக்கியமா பவானந்தா ஆக்டிவிடீஸ் என்னான்னு பாரு...''

விஷ்ணு தலையாட்டினான்.

# 13

மத்திய சிறைச்சாலை.

மதியம் மூன்று மணி. சூப்ரிண்டெண்ட் அறை.

விவேக்கைப் பார்த்ததும் ஜெயில் சூப்ரிண்டெண்ட் உள்ளுக்குள் எரிச்சல் பட்டாலும் - உதட்டுக்கு புன்னகை கொடுத்தார்.

''வாங்க மிஸ்டர் விவேக்... ஜெயக்கொடியையும் ரத்னமாலாவையும் தூக்குக் கயித்திலிருந்து காப்பாத்தற முயற்சி எவ்வளவு தூரத்தில் இருக்கு...''

''பாதி தூரம் வந்துட்டோம்...''

''வந்திருக்கிறது சரியான வழிதானா...?''

''போய்ப் பார்த்தாத்தான் தெரியும்...''

''இப்ப எதுக்காக இங்கே வந்திருக்கீங்கன்னு தெரிஞ்சுக்கலாமா?''

விவேக் புன்னகைத்துக் கொண்டே - தன் சர்ட் பாக்கெட்டிலிருந்து அந்தக் கவரை எடுத்து நீட்டினான்.

''என்ன இது...?''

''வாங்கிப் பாருங்க...''

வாங்கிப் பார்த்தார். புருவங்கள் திகைப்பாய் முடிச்சிட்டுக் கொண்டன.

கவர்னரின் ராஜ்பவன் அலுவலக முத்திரை கவரின் மேல் குத்தப்பட்டு தெரிய - கவரின் வாயை ஊதித் திறந்து உள்ளே இருந்த கடிதத்தை எடுத்தார்.

ஆங்கிலத்தில் நான்கே வரிகள்.

தூக்கு தண்டனை கைதிகள் ஜெயக்கொடி - ரத்னமாலா இரண்டு பேர்களையும் - திரு. விவேக் அவர்கள் சந்திக்க விரும்பினால் உடனே அனுமதிக்கவும். இந்த உத்தரவு மற்ற உத்தரவுகளுக்கு அப்பாற்பட்டது.

கவர்னர்க்காக-

ஆலோசகரின் கையொப்பம்.

''வாங்க...''

''ரெண்டு பேரையும் ஒரே நேரத்துல - ஒரே அறையில் வெச்சு பேசணும்...''

''ஏற்பாடு பண்றேன்... வாங்க...''

நடந்தார்கள்.

பத்து நிமிஷம் கரைந்திருக்கும்.

அறைவாசலில் நிழல் தட்டியது.

விவேக் தலையை உயர்த்த - துப்பாக்கி ஏந்திய பெண் போலீஸோடு - ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் உள்ளே நுழைந்தார்கள். ஜெயில் வாசம் அவர்களை இளைக்க வைத்திருந்தது.

விவேக் சென்ட்ரீஸைப் பார்த்து தலையசைக்க - அவர்கள் பின் வாங்கி நகர்ந்தார்கள். அவர்கள் தலை மறைந்ததும் பெஞ்சைக் காட்டினான்.

''உட்காருங்க ரெண்டு பேரும்.''

உட்கார்ந்தார்கள் தயக்கமாய்.

விவேக் ஆரம்பித்தான்.

''எனக்கு உண்மை வேணும்... எதையும் மறைக்கக் கூடாது. நான் கேக்கிற கேள்விகளுக்கு உங்க பதில்கள் உண்மையானதா இருந்தா... தூக்கு கயித்துல இருந்து தப்பிச்சுக்கலாம்...''

''உண்மையான பதில்களையே சொல்றோம் ஸார்...''

''உங்க ரெண்டு பேரோட ஸ்டேட்மெண்ட்படி ஜோதிமயானந்தாவை நீங்க கொலை பண்ணலை...?''

''ஆமா...''

''உங்க கைகளுக்கு துப்பாக்கி எப்படி வந்தது?''

''தெரியாது...''

''இந்த பதில் நம்பற மாதிரி இல்லையே...?''

''சத்தியமா எங்களுக்கு தெரியாது ஸார்.''

''தெரியாதுன்னு எப்படி சொல்ல முடியும்... நீங்க ரெண்டு பேரும் கடவுள் வாழ்த்து பாடறதுக்காக மேடை மேல ஏறியிருக்கீங்க... பாட்டை பாடிகிட்டு இருக்கும் போதே பாட்டை நிறுத்திட்டு - மார்புப் பகுதிக்குள்ளே மறைச்சு வெச்சிருந்த துப்பாக்கியை எடுத்து ஜோதிமயானந்தாவை ஆளுக்கு ரெண்டு தோட்டா செலவழிச்சு சுட்டு கொன்னிருக்கீங்க... கொலை செஞ்சதுக்கான காரணத்தை சொல்லிட்டு ரெண்டு பேரும் தற்கொலை பண்ணிக்கப் பார்த்திருக்கீங்க... இதெல்லாம் வீடியோவில இருக்கு...''

''ஸார்... அந்த வீடியோ காஸட்டை கோர்ட்ல எங்களுக்கும் போட்டுக் காட்டினாங்க... அதை பார்த்த எங்களுக்கு ஒரே ஆச்சர்யம். எங்ககிட்ட அந்த துப்பாக்கிகள் எப்படி வந்தது...? கடவுள் வாழ்த்து பாடிகிட்டு இருந்த நாங்க எதுக்காக திடீர்னு ஜோதிமயானந்தாவை சுட்டுக் கொன்னோம்...? இதெல்லாம் எங்களுக்கு புரியவே இல்லை ஸார்... ஏதோ மாயாஜால படத்துல பார்க்கிற மாதிரிதான் இருந்தது. அன்னிக்கு கோர்ட்ல என்ன சொன்னோமோ... அதைத்தான் உங்ககிட்டேயும் சொல்றோம் ஸார்...''

''அப்படீன்னா அந்த சம்பவம் நடக்கும்போது உங்க ரெண்டு பேருக்கும் சுயநினைவே கிடையாது...?''

''ஆமா... ஸார்...''

''கடவுள் வாழ்த்து பாட கூப்பிட்டப்போ உங்க ரெண்டு பேர்க்கும் ஞாபகம் இருந்ததா...?''

''இருந்தது...''

''பாடும்போது...?''

''ஞாபகம் இருந்தது... ஆனா பாட்டை நிறுத்தினபோது எதுக்காக நிறுத்தறோம்னு தெரியலை. அதுக்கப்புறம் நடந்த சம்பவங்கள் எதுவுமே ஞாபகத்துல இல்லை. போலீஸ் வேன்ல அவ்வளவு கூட்டத்துக்கு மத்தியில் கையில விலங்கோடு போகும்போதுதான் எங்க ஞாபகம் வந்தது. கோர்ட்ல இதைச் சொன்னோம். ஒத்துக்கலை. அம்னீஷியா மாதிரி ஏதாவது வியாதி இருக்கலாம்னு - டாக்டர்கள் குழு எங்களை டெஸ்ட் பண்ணி பார்த்துட்டு - அப்படி ஏதும் இல்லைன்னு சொல்லிட்டாங்க... ஸோ எங்க ஸ்டேட்மெண்ட் எடுபடலை. செஞ்ச குற்றத்தை திசை திருப்புறதற்காக - நாங்க அது மாதிரி நடிக்கிறோம்னு பிராஸிகூட்டர் தரப்புல சொன்னதை ஜட்ஜ் ஏத்துகிட்டார். செஷன்ஸ் கோர்ட் தீர்ப்பை - ஹைகோர்ட்டும் - ஹைகோர்ட் தீர்ப்பை - சுப்ரீம் கோர்ட்டும் ஜெராக்ஸ் எடுத்த மாதிரி ஒப்பிச்சுட்டாங்க... ஜோதிமயானந்தா ஒரு பெரிய மகான். அவரை கொலை செஞ்சது மாபாதகம்னு சொல்லி - நாங்க போட்ட கருணை மனுவையும் ஜனாதிபதி நிராகரிச்சுட்டார்...''

விவேக் சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு கேட்டான். ''பவானந்தாவை உங்களுக்குத் தெரியுமா...?''

''தெரியும்...''

ஆச்சர்யப்பட்டான்.

''எப்படி தெரியும்...?''

''அவர் நடத்துகிற - தியானப் பயிற்சிப் பள்ளிக்கு ஒவ்வொரு ஞாயித்துக்கிழமையும் நாங்க ரெண்டு பேரும் போறதுண்டு.''

''தியானப் பயிற்சி பள்ளிக்கா...?'' வியப்பை நெற்றி பூராவும் ஒட்ட வைத்தபடி கேட்டான். ''அதாவது மெடிடேஷன்...?''

''ஆமா... ஸார்...''

''அந்த மெடிடேஷன் ஸ்கூல் எங்கே இருக்கு...?''

''கீழ்ப்பாக்கம் கார்டன்ஸ் ரோட்ல... கால்டு வெல் என்ற பழைய கட்டிடம் ஒண்ணு இருக்கு... அந்த கட்டிடத்துக்குள்ளே தான் மெடிடேஷன் கிளாஸஸ் நடக்கும்... ஒரு வாரம் பூராவும் மனசுக்குள் வந்து உட்கார்ந்திருக்கிற டென்ஷனை போக்கிக்கிறதுக்காக நானும் ரத்னமாலாவும் ஒவ்வொரு ஞாயித்துக்கிழமையும் அங்கே போவோம்...''

''பவானந்தா தியானப் பயிற்சிகளை சொல்லிக் கொடுத்தாரா...?''

''ஆமா...''

''இந்த மெடிடேஷன் விஷயத்தை கோர்ட்ல சொன்னீங்

களா...''

''சொல்லலை...''

''ஏன்...?''

''அதைப்பத்தி யாரும் கேட்கலை... போலீஸ் ஸ்டேஷன்ல ஒரு தடவை இன்ஸ்பெக்டர் ஞாயித்துக்கிழமைகள்ல வெளியே எங்கே போவீங்கன்னு கேட்டப்ப மெடிடேஷன் போவோம்ன்னு சொல்லியிருக்கேன்...''

''மெடிடேஷன் பயிற்சிக்கு எத்தனை பேர் வருவாங்க...?''

''நிறைய பேர்...''

''சுமார்?''

''இரு நூறு பேர்...''

''பயிற்சி தர்றது யாரு...?''

''பெரும்பாலும் பவானந்தா... சில சமயங்கள்ல அவரோட சீடர்கள்...''

விவேக் ஜெயக் கொடியை ஏறிட்டான்.

''ஆறு மாசத்துக்கு முந்தி வரைக்கும் மாசத்துக்கு ஒரு தடவை உன்னை பாக்கிறதுக்காக ஜெயந்தன்னு ஒரு ஆள் வந்துட்டு போனது உண்மையா...?''

''உண்மை...''

''யாரது...?''

ஜெயக்கொடி 'உச்' கொட்டினாள். ''அவன் ஒரு கோழை! என்னை காதலிக்கிறதாய் சொல்லிகிட்டிருந்தவன். எனக்கு தூக்கு தண்டனை உறுதியானதும் நீலிக் கண்ணீர் வடிச்சுட்டு - வேற ஒரு பொண்ணை கல்யாணம் பண்ணிகிட்டவன். கடைசியா என்னை பார்த்தப்ப ஆந்திராவில் செட்டிலாகப் போறதா சொன்னான்....''

விவேக் அந்த அறையில் யோசனையாய் சில விநாடிகள் உலாவிவிட்டு ஜெயக்கொடி-ரத்னமாலாவுக்குப் பக்கத்தில் வந்து நின்றான்.

''விழா மேடைக்கு முன் பக்கம் உட்கார்ந்துட்டிருந்த நீங்க ரெண்டு பேரும் பவானந்தாவையே கண்ணிமைக்காமே பார்த்துட்டிருந்தீங்களே... அது ஏன்னு சொல்ல முடியுமா...?''

''அவரை நாங்க பார்க்கவேயில்லை ஸார்... கடவுள் வாழ்த்து பாட எப்ப கூப்பிடுவாங்கன்னுதான் காத்திட்டிருந்தோம்... எங்க ரெண்டு பேர்க்கும் இருந்த கவலையெல்லாம் ஜோதிமயானந்தா சுவாமிகளுக்கு முன்னாடி - கடவுள்

வாழ்த்தை பயம் இல்லாமே இனிமையா பாடி முடிக்கணு மேங்கறதுதான்...''

விவேக் குழப்பமாய் நெற்றியை கீறிக் கொண்டான்.

'தப்பு எங்கே...?'

'யாரிடம்...?'

# 14

ராத்திரி பத்து மணி.

விவேக் மேஜை விளக்கைப் பொருத்திக் கொண்டு அந்த தடிமனான புத்தகங்களை புரட்டிக் கொண்டிருந்தான். எல்லாமே மெடிடேஷன், ஹிப்னாடிஸம் சம்பந்தப்பட்ட ஆங்கில புத்தகங்கள். பழைய தமிழ் சுவடிகள்.

மைண்ட்ஸ்.

தி மைண்ட் - இட்ஸ் டிஸ் ஆர்டர்ஸ் அண்ட் க்யூர்ஸ்.

குவாண்டம் பாலிஸி.

தியானம் துதிப்பது மட்டும் அல்ல. ஒரு குறிக்கோளை அடையவும்தான். மூளையின் செயல்பாடுதான் மனம். மனம் என்பது இருதயத்தில் இல்லை. மூளைக்கு செல்லும் நரம்புகளில் இருக்கிறது. ஒருவனுடைய மனதில் பாலைவன வெப்பத்தையும் ஏற்படுத்த முடியும். பனிமலையின் குளிர்ச்சியையும் உண்டாக்க முடியும். மனதை மலராகவும் ஆக்கலாம். ஒரு ஆயுதமாகவும் உபயோகப்படுத்தலாம். ஆத்மா கடந்த கால நிகழ்ச்சிகளை ஞாபகத்தில் கொண்டுள்ளதால் மனதில் அவை உணரப்படுகிறது. ஆகவே மனம் மிக மிக நுட்பமானது. உடனே உடைந்து போகும் தன்மை கொண்டது. விரோத சூழ்நிலையை...

''க்கும்...''

விவேக்கிற்கு பின்புறமாய் வந்து நின்ற ரூபலா தொண்டையைக் கனைத்தாள். ''இந்த குஷ்பூ சைஸ் புத்தகங்களையெல்லாம் எங்கேயிருந்து கொண்டாந்தீங்க...?''

''ப்ரிட்டிஷ் கவுன்ஸில் லைபரரி, கன்னிமாரா... யூனிவர்ஸிடி லைபரரி. இன்னும் கொஞ்சம் புஸ்தகம் வரணும்...''

ரூபலா ஒரு நாற்காலியை இழுத்து போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். ''இதிலிருந்து என்ன கிடைக்கும்னு நினைக்கறீங்க...?''

''ஜெயக்கொடி ரத்னமாலா ரெண்டு பேரும் அவங்களுக்கே தெரியாமே ஏதோ ஒரு சக்திக்கு உட்பட்டு ஜோதிமயா னந்தாவை சுட்டு கொலை பண்ணியிருக்காங்க.''

''ஹிப்னாடிஸம் மாதிரியா...?''

''அப்படியும் இருக்கலாம்...! ஆனா அதுதான்னு நிச்சயம் சொல்ல முடியாது. இது சாமியார்கள் சம்பந்தப்பட்ட விவகாரம். ஜெயக்கொடியையும் ரத்னமாலாவையும் இயக்கினவங்க வேற உபாயங்களைக் கூட கையாண்டிருக்கலாம்...''

''என்ன உபாயம்?''

விவேக் அந்த பழைய சுவடிகளாலான அந்த தமிழ்ப் புத்தகத்தை எடுத்து கவனமாய் பக்கங்களைப் புரட்டி - ஒரு பாடலைக் காட்டி படித்தான்.

''நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளர்ந்த மறைமொழி தானே மந்திரம் என்க - இதன் பொருளாவது மந்திர அட்சரங்களின் சப்தத்தின் ஆற்றலால் மூளையின் சில நுண் பகுதிகள் செயல்பட்டு எதற்காக மந்திரம் செபிக்கப்படுகிறதோ அந்தச் செயலை செய்வதற்கு உரிய அதிர்வலைகள் நம் உடலில் இருந்து வெளிப்படுவதை...''

ரூபலா கொட்டாவி விட்டாள். விவேக் விடாமல் படித்தான். ''மாந்தரீக அஷ்டமசித்து என்கிற மந்திர நூலில் கருவூர் சித்தர் என்ன சொல்லியிருக்கார்ன்னா... ஏற்றது லோக வசியத் திருவக்கம் நாற்றஞ்சு அறுபத்து நாலும் பதினாறும் நூற்றஞ் சற்பத்து... திருமந்திர மாலை...''

டெலிபோன் அடித்தது.

விவேக் புத்தகத்தை மூடிவிட்டு - கை நீட்டி ரிஸீவரை எடுத்தான்.

''ஹலோ...''

''ஸார்... நான் விஷ்ணு...''

''ஆஸ்ரமத்துக்கு கிளம்பிட்டியா...?''

''கிளம்பிட்டே இருக்கேன்... ஸார்.''

''பத்திரம்...! பின்பக்க சுவரேறி குதிக்கிறதும் - உள்ளே போய் நோட்டம் விடறதும் சாதாரண காரியமில்லை...''

''இந்த மாதிரியான திருட்டுத்தனமெல்லாம் நல்லா பண்ணுவேன். ஸார்... காலேஜ் ஸ்டூடண்டா இருக்கும்போது... டெல்லியில் ஒரு நாள் லேடீஸ் ஹாஸ்டல்ல...''

விவேக் சிரித்தான். ''தெரியும்... சொல்லியிருக்கே... லேடீஸ் ஹாஸ்டல் சுவர் ஏறி குதிச்சு உன் கேர்ள் ஃப்ரண்டை பார்க்கப் போயிருக்கே! அது காதல்... இது உத்யோகம்... பி... கேர்ஃபுல்...''

''எஸ்... ஸார்...''

''முக்கியமான ஏதாவது தகவல் கிடைச்சா... உடனே எனக்கு போன் பண்ணு... வீட்ல நான் இல்லேன்னா... ரூபல

இட்ட விஷயத்தை சொல்லிடு...."

விவேக் பேசிவிட்டு ரிஸீவரை வைக்க ரூபலா ஏறிட்டாள்.

"நீங்க... இப்ப வீட்லதானே இருக்கப் போறீங்க...?"

"இல்லை. நானும் ஒரு சின்னதா திருட்டுத்தனம் பண்ண கிளம்பிட்டிருக்கேன்..."

"திருட்டுத்தனமா...?"

"ஆமா... கீழ்ப்பாக்கம் கார்டன் ரோட்டில் இருக்கிற மெடிடேஷன் பயிற்சிப் பள்ளிக்குள்ளே நுழையப் போறேன்..."

# 15

இரவு மணி 11.30.

கீழ்பாக்கம் கார்டன் ரோடு - போக்குவரத்து சத்தம் உள்பட சகலவிதமான சத்தங்களை தொலைத்துவிட்டு - எரியாத கார்ப்பரேஷன் விளக்குகளோடு மோன நிஷ்டையில் இருந்தது.

விவேக் தன்னை யாராவது பின் தொடரக்கூடும் என்பதற்காக பைக்கை வீட்டின் முன் பக்கத்திலேயே வைத்துவிட்டு - வீட்டுப் பின் பக்கமாய் வெளியேறி இருட்டான சந்துகளில் நடந்து - பிரதான சாலைக்கு வந்து ஒரு ஆட்டோவைப் பிடித்து - கீழ்பாக்கம் கார்டன் சாலையின் நுனியிலேயே இறங்கிக் கொண்டான். ஆட்டோவை அனுப்பிவிட்டு மெல்ல நடந்தான்.

ராஜயோக பயிற்சி நிலையம். மெடிடேஷன் சென்டர். ரன் - பை ஜோதிமயானந்தா ஆஸ்ரமம்.

விவேக் காம்பௌண்ட் சுவரை சுற்றிக் கொண்டு பின் பக்கம் வந்தான்.

விவேக் சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு - ஒரு எம்பு எம்பி அந்த ஐந்தடி சுவரின் மேல் தம் பிடித்து ஏறினான். மறுபக்கம் இடம் பார்த்து குதித்தான்.

குதித்த இடம் ஒரு தோட்டம் மாதிரி இருந்தது. காற்றில் ஏதோ பச்சிலைகள் வாசனை. பார்வை இருட்டுக்கு பழகிக் கொண்டதும் மெதுவாய் நடந்தான். கட்டிடத்தின் வராந்தாவில் நாற்பது வாட்ஸ் வெளிச்சம் கூடிய வரைக்கும் இருட்டை தள்ளி வைத்திருந்தது.

விவேக் நடந்தான்.

யாரும் தட்டுப்படவில்லை.

வாட்ச்மேன் முன் பக்கம் இருக்கலாம். வராந்தாவில்

கொட்டியிருந்த இருட்டு விவேக்கிற்கு சாதகமாய் இருக்க. அவன் பூனை நடைபோட்டு பிரதான மெடிடேஷன் ஹாலுக்குப் பக்கத்தில் வந்தான்.

ஹால் பூட்டியிருந்தது.

முன் பக்க கேட் அருகே - வாட்ச்மேனின் சலனங்கள் இருட்டில் தெரிய விவேக் பேண்ட் பாக்கெட்டில் இருந்த மாஸ்டர் 'கீ - பஞ்ச்'சை எடுத்து ஒவ்வொரு சாவியாய் உள்ளே நுழைத்துப் பார்த்தான்.

பத்து நிமிஷ போராட்டத்துக்குப்பின் பூட்டு கைகளை தூக்கிக் கொள்ள - விவேக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனான்.

இருட்டில் பெரிய ஹால்.

பேனா டார்ச்சை உயிர்ப்பித்துக் கொண்ட விவேக் அது சிக்கனமாய் சிந்திய வெளிச்சத்தில் நடந்தான். சுவரில் நடு நாயகமாய் - ஒரு ஜெயிண்ட் போட்டோ சைஸில் ஜோதிமயானந்தா வலது கையை உயர்த்தி ஆசீர்வதிக்கிற பாணியில் சிரித்தார். போட்டோவுக்கு சாத்தியிருந்த ரோஜா மாலை வாடியிருந்தது.

சுவரில் ஆங்காங்கே தியானப் பயிற்சி படங்கள்.

தியான மேடைக்கு பக்க வாட்டில் - ஒரு அறை தெரிந்தது. டார்ச் வெளிச்சம் அங்கே - போக - பூட்டப்பட்டிருந்த கதவின் மேல் - அந்த வாசகம் தெரிந்தது.

<u>அனுமதியின்றி இந்த அறைக்குள் யாரும் வரக்கூடாது.</u>

பெரிய பூட்டு.

விவேக் மாஸ்டர் கீ பஞ்சில் அந்த பூட்டுக்கு ஏற்ற மணமகளைத் தேடி - ஜோடி சேர்க்க - பூட்டு ஒப்புக்கொண்டு தலை கவிழ்ந்தது.

கதவைத் தள்ளி உள்ளே போனான்.

இருட்டில் நிறைய அலமாரிகள்.

அதில் வரிசை பிசகாமல் புத்தகங்கள். மண்டியிருந்த காற்றில் ஏதோ தைல வாசம். பல்லி உச் கொட்டியது.

விவேக் நிதானமாய் நடந்தான்.

டார்ச் வெளிச்சம் அங்கும் இங்கும் பாய - சில புத்தகங்களை பார்வை தொட்டது.

'மைண்ட் கண்ட்ரோல் சிஸ்டம்.'

'வாட் இஸ் மைண்ட்?'

'யூ கேன் ஸ்டீல் த அதர்ஸ் மைண்ட்.'

இடையிடையே அட்டைகளில் வரையப்பட்ட ஏதேதோ சங்கதிகள்.

வசீகர சிதம்பர சக்கரம்.

பரப் பிரும்மா சக்கரம்.

காரீய உலோகத் தகடுகளில் நட்சத்திர முக்கோணமிட்ட குறிகள். விவேக் பிரமிப்பாய் நடந்தான்.

'இதெல்லாம் என்ன...?'

புரிந்தும் புரியாத மாதிரி இருந்தது.

'ஒரு மனித மனத்தை வசியப்படுத்துகிற சமாச்சாரங்கள் இவை. தியானப் பயிற்சிப் பள்ளியில் இதெல்லாம் எதற்காக...?'

விவேக் யோசித்துக் கொண்டே - அந்த அறையை டார்ச் வெளிச்சத்தில் அரை மணி நேரம் அலசிப்பார்த்துவிட்டு - மறுபடியும் ஹாலுக்குள் நுழைந்தான்.

'வேறு பக்கம் ஏதாவது அறை இருக்கிறதா...?'

ஹால் இருட்டில் மெல்ல நடந்து - கதவுக்கு வந்து அதன் கைப்பிடியைப் பற்றி - மெல்ல இழுத்து திறந்தான்.

கதவு விலக-

வெளியே-

மார்புக்கு குறுக்காய் கைகளைக் கட்டிக் கொண்டு - உயரமாய் யாரோ நின்றிருந்தார்கள்.

விவேக் திடுக்கிட்டு டார்ச் வெளிச்சத்தை உயர்த்த - பவானந்தா.

## 16

பவானந்தா தன் பெரிய உதடுகளில் புன்னகைத்தார்.

''எங்கள் தியான பயிற்சிப் பள்ளிக்கு வருகை புரிந்த உங்களுக்கு என்னுடைய வணக்கமும் நன்றியும்...''

விவேக் பவானந்தாவையே பார்த்துக் கொண்டிருக்க அவர் தொடர்ந்தார்.

''ஒரே ஒரு குறை என்னவென்றால்... இப்படி சோதனை நடத்த ராத்திரி நேரத்தில் வந்திருக்க வேண்டாம். ஒரு பகல் நேரத்திலேயே வந்திருக்கலாம்...''

விவேக் அதிர்ச்சியை ஜீரணித்துக் கொண்டு இரண்டடி முன்னால் வந்தான். ''பொய்களை தோலுரிக்க ராத்திரி நேரம்தான் சரியானது...''

''எது பொய் எது உண்மை என்பது நல்ல வெளிச்ச நேரத்தில்தான் தெரியும்... பரவாயில்லை -நீங்கள் ஒரு போலீஸ் ஆபீஸர். உண்மைகளைக் கண்டு பிடிக்கிறதுக்காக வந்திருப்பவர். உங்களுக்கு நான் உதவ வேண்டும். வாருங்கள் என்னுடைய அறைக்கு போய்விடலாம்...''

சற்றுத் தொலைவில் தெரிந்த வெளிச்ச சிதறல்களோடு தெரிந்த ஒரு அறையைக் காட்டினார் பவானந்தா. சொல்லிவிட்டு நடக்கவும் ஆரம்பித்தார். விவேக் தன் இடுப்பில் மறைத்து வைத்திருந்த - ரிவால்வரை தொட்டுப் பார்த்துக் கொண்டு அவரோடு நடந்தான்.

மனதுக்குள் ஆச்சர்யம் கசிந்தது.

'ஆஸ்ரமத்திலிருந்து பவானந்தா திடீரென்று இங்கே எப்படி வந்தார்...?'

'என்னைப் பார்த்தும் இவர் பதட்டமோ ஆத்திரமோ காட்டவில்லையே... ஏன்?'

பவானந்தா வராந்தாவில் நடந்து கொண்டே சிரித்தார்.

''நான் எப்படி இங்கே வந்தேன் என்பது உங்களுக்கு ஆச்சர்யமாக இருக்கும். இதில் ஆச்சர்யப்படுவதற்கு ஒன்றும் இல்லை. வாரத்தில் இரண்டு நாள் ஆஸ்ரமத்தில் உறங்காமல் இங்கே வந்து உறங்குவது என் வழக்கம். காரணம் அதிகாலை எழுந்து சில தியானப் பயிற்சிகளை மேற்கொள்வதற்காக... இந்த அமைதியான சூழ்நிலை எனக்கு தேவைப்படுகிறது. நீங்கள் பின்பக்க சுவர் ஏறி குதிக்கும்போது நான் தோட்டத்தில்தான் இருந்தேன். உறக்கம் பிடிக்காதபோது... தோட்டத்துக்கு போய் நான் உலாவுவது வழக்கம்... பார்த்ததுமே நீங்கள்தான் என்பதை புரிந்து கொண்டேன். நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள் என்பதை பார்ப்பதற்காக - பொறுமையாக காத்திருந்தேன்.''

அறை வந்தது.

சிறிய அறை. சுவரோரமாய் ஒரு கட்டில். எதிரே இரண்டு நாற்காலிகள்.

''உட்காருங்கள் விவேக்...''

பவானந்தா - நாற்காலியைக் காட்டிவிட்டு - கட்டிலில் உட்கார்ந்தார். பின் தலையணைக்கு கீழே கையைவிட்டு ஒரு சாவிக் கொத்தை எடுத்தார்.

''வாங்கிக் கொள்ளுங்கள்...''

''இது எதுக்கு...?''

''இந்த தியான பயிற்சி பள்ளியின் சாவிக் கொத்து. இங்கே மொத்தம் ஏழு அறைகள் இருக்கின்றன. ஒவ்வொரு அறையையும் திறந்து நீங்கள் ஆற அமர சோதனை போட்டு

விட்டு வரலாம்... அதுவரைக்கும் நான் இந்த இடத்தை விட்டு அசையமாட்டேன். ம்... வாங்கிக் கொள்ளுங்கள்...''

விவேக் சாவிக் கொத்தை வாங்காமல் அவரையே சில விநாடிகள் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு கேட்டான்.

''எனக்கு வேண்டியது சாவிக் கொத்து இல்லை...''

''பின்னே...?''

''உண்மைகள்...''

''என்ன உண்மைகள்...?''

''ஆஸ்ரமத்தில் வைத்து உங்களோடு பேசிக் கொண்டிருந்தபோது ஜெயக்கொடியையும் ரத்தினமாலாவையும் முன்பே உங்களுக்குத் தெரியுமா என்று நான் கேட்டபோது நீங்கள் என்ன சொன்னீர்கள்...?''

''தெரியாது என்று சொன்னேன்...''

''ஆனால் அந்த இருவரும் உங்களிடம் தியானப் பயிற்சி பெறுவதற்காக வாரம் ஒரு முறை இங்கே வந்திருக்கிறார்கள்...''

''வந்திருக்கலாம். ஆனால் நான் பார்த்ததில்லை...''

''அது எப்படி நீங்கள் பார்க்காமல் இருக்க முடியும்...?''

''இந்தப் பயிற்சிப் பள்ளிக்கு நிறைய பேர் காலையிலும் மாலையிலும் வருகிறார்கள். தியான மண்டபம் முழுக்க - ஆண்களும் பெண்களுமாய் உட்கார்ந்திருப்பார்கள். ஞாயிற்றுக்கிழமைகளில் இன்னமும் அதிகம் பேர் வருவார்கள்... ஒவ்வொருவரையும் நான் பார்த்துக் கொண்டு இருக்க முடியாது... அது மட்டுமில்லை பெரும்பாலான தியானப் பயிற்சிகளை என் சீடர்கள்தான் சொல்லிக் கொடுப்பது வழக்கம். நான் மேடையில் நின்று மேற் பார்வையிடுவதோடு சரி...''

''ஒரு கேள்வி...''

''கேளுங்கள்...''

''தியானத்தின் மூலம் ஒருவர் இன்னொருவர் மனதை வசப்படுத்த முடியுமா...?''

''முடியாது... ஒருவன் தன் மனதை தன் வசம் வைத்திருப்பதற்கு பெயர்தான் தியானம்...''

''ஜோதிமயானந்தாவை சுட்டது எங்களுக்கே தெரியலை. நாங்க சுயநினைவோடு அந்தக் கொலையைப் பண்ணலை என்று ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் ஸ்டேட்மெண்ட்டில் சொல்லியிருக்கிறார்கள். அந்த ஸ்டேட்மெண்ட் உண்மையாய் இருப்பதற்கான சாத்தியங்கள் இருப்பதாகவே நினைக்கிறேன்...''

''என்ன சாத்தியங்கள்...?''

''ஜோதிமயானந்தா சுடப்படுவதற்கு முன்பும் பின்பும் விழாமேடை நிகழ்ச்சிகளை வீடியோவில் பார்த்தபோது - கடவுள் வாழ்த்து பாடுவதற்காக முன் வரிசையில் உட்கார்ந்திருந்த ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் அசாதாரணமாய் காணப்படுகிறார்கள்.''

''அசாதாரணமாய் என்றால்...?''

''இருக்கிற இடத்தைவிட்டு அசையாமல் யார்க்கோ கட்டுப்பட்டவர்களைப் போல் - ஒரே திசையைப் பார்த்தபடி - அதுவும் ஒரே நபரை பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறார்கள்.''

''ஒரே நபரைப் பார்த்தபடியா...? யார் அந்த நபர்...?''

''அது நீங்கள்தான்...''

பவானந்தா புன்னகைத்தார்.

''நீங்கள் சொல்வது ஆச்சர்யமாக இருக்கிறது விவேக். ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் கடவுள் வாழ்த்து பாடுவதர்காக மேடைக்கு வரும்போதுதான் அவர்களை முதல் தடவையாக பார்த்தேன்...

இப்போதுதான் உங்கள் நினைப்பு எனக்கு புரிகிறது அந்த இரண்டு பெண்களை நான் மனோவசியம் செய்து ஜோதிமயானந்தாவை கொலை செய்ய வைத்திருக்கிறேன் என்று நீங்கள் நினைத்து விட்டீர்கள். அப்படித்தானே...? உங்கள் நினைப்பு மிக மிக தவறு விவேக். ஜோதிமயானந்தா ஒரு உயரிய ஆத்மா. அவருடைய நிழலைக்கூட பூஜிக்கிறவன் நான். அவரைக் கொலை செய்யும் பாதக எண்ணம் எனக்கு மட்டும் இல்லை. ஆஸ்ரமத்தில் இருக்கிற எந்த உயிரினத்திற்கும் வராது...''

''உள்ளே உள்ள உங்கள் தியானப் பயிற்சி அறையில் - மனதை வசியப்படுத்துகிற சில வித்தியாசமான புத்தகங்களைப் பார்த்தேன். ஏதோ மாந்தரீக சக்கரங்கள், காரியத் தகடுகள். பிறர் மனதை வசியப்படுத்தி காரியங்களை ஆற்றிக் கொள்வது எப்படி - போன்ற புத்தகங்களையும் பார்த்தேன். ஒரு தியானப் பயிற்சி பள்ளிக்கு அதெல்லாம் தேவைதானா...?''

பவானந்தா பெரிதாய் சிரித்தார். ''அவைகளைப் பார்த்தும் குழப்பிக் கொண்டீர்களா...? அதெல்லாமே ஆக்கபூர்வமான காரியங்களுக்கு பயன்படுத்தப்படுபவை. ஆன்மீகத்தில் எவ்வளவோ விஷயங்கள் இருக்கின்றன. சக்கரங்களில் அன்னை பராசக்தியின் சக்தி நிறைந்து வியாபித்திருக்கிறது. அன்னை காயத்ரி சக்தி யந்திரம். ஸ்ரீ நவதுர்க்கா சக்கரம். இதிலேயும் ஒன்பது துர்க்கைகள் உண்டு. வன துர்க்கா, சூலினி துர்க்கா, ஜாதவேதோ துர்க்கா, சாந்தி துர்க்கா, சபரி துர்க்கா,

ஜ்வல துர்க்கா, லவண துர்க்கா, தீப துர்க்கா, ஆஸினி துர்க்கா. இருக்கும் இடமெல்லாம் இருளை அகற்றி மங்களம் பெருக்கும் அன்னை பராசக்தியின் ஸ்ரீ சக்கரம் ஒப்பற்றது. அந்த சக்கரத்தில் உலகம் முழுவதும் வாழும் மனிதர்களின் வாழ்க்கை நிலை அடங்கிப் போய் விடுகிறது... தீயமனங்களை திருத்தி நல்வழிபடுத்தவே - ஸ்ரீசக்கரங்களை நான் பயன்படுத்துகிறேன்... இதை ஆங்கிலத்தில் ஆந்த்ரோ பயோ மெட்ரிக் சயின்ஸ் என்று சொல்கிறார்கள். ஸ்ரீ சக்கரத்தில் அடங்கி இருக்கும் ஒன்பது முக்கோணங்களும் ஒன்பது கிரகங்களையும் ஒன்பது எண்களையும் குறிக்கும். அதை வைத்துக் கொண்டு... எவ்வளவோ விஷயங்களை...''

விவேக்கிற்கு புரிந்து விட்டது.

பவானந்தா ஹார்ம் லெஸ். தப்பு இவரிடம் இல்லை. வேறு எங்கேயோ இருக்கிறது.

''ஒன்றை மட்டும் புரிந்து கொள்ளுங்கள் விவேக். ஜெயக்கொடி, ரத்னமாலா உண்மையிலேயே குற்றமற்றவர்கள் என்றால் அவர்கள் தூக்கில் தொங்க மாட்டார்கள்... உங்கள் முயற்சிகளைத் தொடங்குங்கள்.''

விவேக் வெளியே வந்தான்.

## 17

நள்ளிரவில் கதவைத் திறந்த ரூபலா விவேக்கைப் பார்த்ததும் கேட்டாள்.

''என்னாச்சு... போன காரியம்...?''

விவேக் நாற்காலியில் 'தொப்'பென்று உட்கார்ந்து நெற்றியைப் பிடித்துக் கொண்டான். பவானந்தாவின் சந்திப்பைப் பற்றி சொல்ல - ரூபலா சிரித்தாள்.

டெலிபோன் அடித்தது.

விவேக் ரிஸீவரை எடுத்தான்.

''எஸ்...''

''ஸார்... நான் விஷ்ணு...''

''ஆஸ்ரமத்துக்குள்ளே நுழைஞ்சியா?''

''நுழைஞ்சேன் ஸார்... ஒரு மணி நேரம் மூவ் பண்ணி பார்த்தேன்... வித்தியாசமா எதுவும் தெரியலை... அவனவன் குறட்டை விட்டு தூங்கிட்டிருக்கான்...''

''ஒரு அரை மணி நேரத்துக்குள்ளே வந்துடுவியா?''

''வந்துடுவேன் ஸார்...''

விவேக் ரிஸீவரை வைத்துவிட்டு காத்திருந்தான்.

அரை மணி நேரம் - ஒரு மணி நேரமாயிற்று - இரண்டு மணி நேரமாயிற்று. மூன்று மணி நேரமாயிற்று.

இரவு விடியவும் ஆரம்பித்துவிட்டது.

விஷ்ணு வரவில்லை.

# 18

டி.ஜி.பி. அலுவலகம்.

டி.ஜி.பி.க்கு எதிரில் விவேக் சற்று கவலையாய் உட்கார்ந்திருக்க அவர் கேட்டுக் கொண்டிருந்தார். காலை மணி பத்து.

''விஷ்ணு உங்களுக்கு போன் பண்ணும் போது எத்தனை மணி இருக்கும்...?''

''பனிரெண்டரை மணி...''

''ஜி.எஸ்.டி. மெயின்ரோடு டெலிபோன் பூத்திலிருந்து தானே பேசறதாய் சொன்னரர்...?''

''ஆமா... ஸார்...''

''ஏறக்குறைய பத்து மணி நேரமா அவர்கிட்டயிருந்து தகவல் இல்லை...?''

''எஸ்... ஸார்...''

''நோ டவுட்... ஸம்திங் ஹேப்பண்ட்...''

''ஸார்... இந்த ஜோதிமயானந்தா மர்டர் கேஸை நான் தொட்டது டெல்லி போலீஸுக்கே பிடிக்கலை... ரெண்டு அப்பாவி பெண்களை தூக்குக் கயித்திலிருந்து விடுவிக்க நானும் விஷ்ணுவும் எடுத்துகிட்ட முயற்சிகளை கொலைக்குப் பின்னால் இருந்தவங்க மட்டும் இல்லை... சி.பி.ஐ.யும் விரும்பலை...''

''மிஸ்டர் விவேக்...! உங்களுக்கு நான் ஆரம்பத்திலேயே சொன்னேன்... நீங்க கேட்கலை... சில விஷயங்களை நாம தொடாம இருக்கிறது பெட்டர். இப்ப எல்லாமே பாலிடிக்ஸ்..''

''வெரி ஸாரி ஸார்... அக்கிரமமும் அநியாயமும் எங்கெங்கே நடக்குதோ அங்கெல்லாம் காக்கி யூனிஃபார்ம் நுழையணும். தப்பு பண்ணினவங்க யாராயிருந்தாலும் சரி... எவ்வளவு காலமானாலும் சரி... தண்டிக்கப்படணும்... விஷ்ணு பத்து மணி நேரமா காணலை... என் உயிரை பற்றியும் எனக்கு கவலையில்லை. சட்டமும் நீதியும் காணாமே போயிடக்கூடாதேங்கிறதுதான் கவலை...''

''ஓ.கே... மிஸ்டர் விவேக்...! நீங்க மொதல்ல உங்க

லீவை கான்ஸல் பண்ணிட்டு ட்யூட்டியில் ஜாய்ன் பண்ணுறுங்க... இந்தக் கேஸை - ரீ ஒப்பன் பண்ணி இன்வெஸ்டிகேஷனை கண்டினியூ பண்ண டெல்லியிலிருந்து பர்மிஷனை நான் வாங்கித் தர்றேன்...''

''டெல்லி மறுத்துட்டா...''

''இனி மறுக்க முடியாது... ஏன்னா விஷ்ணு ஏற்கெனவே ஒரு முறை கொலை முயற்சியிலிருந்து தப்பிச்சிருக்கார். இப்போ ரெண்டாவது தடவையா காணாமே போயிருக்கார். இதையே காரணம் காட்டி டெல்லியிலிருந்து பர்மிஷன் வாங்கிடலாம்... ஐ வில் அரேன்ஞ்ச் எவ்ரி திங்க்...''

''தாங்க் யூ... ஸார்... நான் இன்னிக்கே ட்யூட்டி ஜாய்ண் பண்றேன்...''

''டூ... இட் அண்ட் டேக் ஸ்டெப்ஸ்...''

விவேக் எழுந்து சல்யூட் அடித்துவிட்டு வெளியே வந்தான். வராந்தாவில் யோசனையாய் நடந்தான்.

'விஷ்ணுவை எந்த திசையில் போய் தேடுவது...?'

'உயிரோடு விட்டு வைத்திருப்பார்களா...?'

வராந்தாவை கடக்கும்பொழுது - அந்த இரண்டு இளம் போலீஸ் அதிகாரிகள் சிகரெட் புகைத்தபடி பேசிக் கொண்டிருந்தார்கள்.

''அப்படீன்னா நேத்து சாயந்தரம் நீ பீச்சில் என்னைப் பார்க்கலை?''

''இல்லை...''

''என்ன இப்படி சொல்றே செல்வம்...? உனக்கு நான் விஷ் கூட பண்ணினேன். நீயும் கூட கையை அசைச்சியே...?''

''உழைப்பாளர் சிலைகிட்டதானே...?''

''ஆமா...''

''நான் உன்னை பார்க்கவேயில்லை. எனக்கு வேண்டிய ரிலேடிவ் ஒருத்தர் அந்தப்பக்கமா போனார். அவரைப் பார்த்து கையை ஆட்டினேன்.''

''நீ என்னைத்தான் பார்க்கிறேன்னு நினைச்சு உனக்கு போய் விஷ் பண்ணினேன் பாரு... என்னைச் சொல்லணும்...''

''மிஸ்டர் விவேக் வர்றார்...''

இருவரும் கையில் இருந்த சிகரெட் துண்டுகளை பூட்ஸ் கால்களுக்கு கீழே போட்டு கூழாக்கிவிட்டு சல்யூட் அடித்தார்கள்.

விவேக் தன் ஸீட்டை நோக்கி வேகமாய் போனான்.

# 19

விஷ்ணு கண்விழித்தபோது - தான் அசையமுடியாத ஒரு சூழ்நிலையில் இருப்பதை உடனே உணர்ந்தான். பின்னந் தலையை எதுவோ கவ்வி பிடித்திருந்தது. கைகளையும் கால்களையும் ஒரு செண்டிமீட்டர் கூட அசைக்க முடியவில்லை. அறைக்குள் செயற்கை இருட்டு.

ஜி.எஸ்.டி. மெயின் ரோட்டு டெலிபோன் பூத்திலிருந்து விவேக்கோடு பேசிவிட்டு வெளியே வந்தபோது யாரோ பின்புறம் இருந்து தாக்கியதும் கர்ச்சீப்பால் முகம் பொத்தப்பட்டு உடனடியாய் தலை கிறுகிறுத்து மயக்கத்துக்கு போனதும் ஞாபகத்திற்கு வந்தது.

'தாக்கியது யார்...?'

'இது எந்த இடம்...?'

விஷ்ணு யோசித்துக் கொண்டிருக்கும்போதே -

யாரோ அறைக்கதவைத் திறந்து கொண்டு உள்ளே வருவது தெரிந்தது.

பார்வையை உன்னிப்பாக்கியவன் -

அதிர்ந்தான்.

வந்தது நாகரத்தினம்மாள்.

கையில் இஞ்செக்ஷன் ஊசி.

விஷ்ணுவுக்கு பக்கத்தில் வந்து நின்று புன்னகைத்தாள்.

''என்ன விஷ்ணு... முழிச்சிட்டியா...?''

''நீ... நீ... நீங்க...?''

''என்னை தெரியலை... நான்தான் நாகரத்தினம்மாள்.'' சொல்லிக்கொண்டே அவனுடைய புஜத்தைப் பற்றினாள்.

விஷ்ணு திமிறினான்.

''எ... எ... என்ன.. இது...?''

''தெரியலை..? இஞ்செக்ஷன்...''

''எ... எதுக்கு...?''

அறைக்கதவு மறுபடியும் திறந்தது.

கெச்சலாய் - உயரமாய் ஒரு வழுக்கைத்தலை மனிதரும் ஒரு இளைஞனும் உள்ளே வந்தார்கள்.

வழுக்கை சிரித்தது.

''இஞ்செக்ஷனை போட்டுக்கோ... விஷ்ணு... விபரம் என்னாங்கிறதை நான் சொல்றேன்...''

நாகரத்தினம்மாள் விஷ்ணுவின் கன்னத்தை தட்டினாள்.

''என்ன அப்படி பார்க்கிறே... அவங்க யாருமில்லை. என்னோட கணவரும் மகனும்தான்...''

விஷ்ணுவின் புஜத்தில் இஞ்செக்ஷன் ஊசி - ஏறியது. மருந்து உள்ளுக்குள் பாய்ந்து - இளம் சூடாய் ரத்தத்தில் கலப்பதை உணர முடிந்தது.

நாகரத்தினம்மாளின் வழுக்கைத்தலை கணவர் சுந்தர பூபதியும் மகன் இளங்கோவும் விஷ்ணுவுக்கு பக்கத்தில் வந்து நின்றார்கள்.

''பயப்படாதே... விஷ்ணு... உன்னைக் கொன்னுடமாட்டோம். நாங்க பண்ணப் போறதெல்லாம் இதுதான்... உன்னோட மூளைப் பகுதியில் இருக்கிற சில முக்கியமான செல் சங்கதிகளை நிரந்தரமா அழிக்கப் போறோம். அப்புறம் செரிபெல்லம் போர்ஷனில் கொஞ்சம் சில்மிஷ வேலை. கடைசியா மெடுல்லா ஆப்லேங் கேட்டா பகுதியில் - ஒரு முக்கியமான சின்ன நரம்பை வெட்டிடுவோம். அவ்வளவுதான். இதையெல்லாம் பண்ணப் போறது நாங்க இல்லை... நாங்க உருவாக்கியிருக்கற மைண்ட் கண்ட்ரோல் கம்ப்யூட்டர்ஸ். கொஞ்சம் தலையை அண்ணாந்து பாரு...''

விஷ்ணு சிரமப்பட்டு அண்ணாந்தான்.

செவ்வகமாய் ஒரு ஃபைபர் உடம்போடு - அந்த கம்ப்யூட்டர் சங்கதி தெரிந்தது.

மானிட்டர் திரையில் விஷ்ணுவின் தலைபாகம்.

'இவர்கள் என்ன பண்ணப் போகிறார்கள்...?'

அடிவயிற்றை பயம் கீறியது.

திமிறினான்.

முடியவில்லை.

சுந்தரபூபதி குனிந்து சிரித்தார். ''ஜோதிமயானந்தா மர்டர் கேஸை மறுபடியும் ஓப்பன் பண்ணி இன்வெஸ்டிகேஷன் நடத்த வேண்டாம்ன்னு உன்னை மறைமுகமா மிரட்டிப் பார்த்தோம். உன் உயிர்க்கு குறி வெச்சு பெட்ரோல் குண்டோடு ஒரு ஆளைக்கூட அனுப்பி வெச்சோம். நீ தப்பிச்சுட்டே... உன்னால இப்ப விவேக்கும் கேஸ்ல தீவிரம் காட்ட ஆரம்பிச்சுட்டார். இந்த தீவிரத்தை நாங்க விரும்பலை...''

மகன் இளங்கோ குறுக்கிட்டான். ''அடுத்த இருபத்தி நாலு மணிநேரத்துக்குள்ளே... உன் மூளையோட சில முக்கியமான சங்கதிகள் முடமாக்கப்படும். அதுக்கப்புறம் உன்னை வெளியே விட்டுடுவோம்... உன்னால நடக்க முடியும். ஆனா அந்த நடை வேகமா இருக்காது. பேச முடியும். ஆனா பேச்சில் தெளிவு இருக்காது. ரெண்டு வயசுக் குழந்தை பேசற மாதிரி

இருக்கும். உனக்கு பசிக்கும். சாப்பிடலாம். தூக்கம் வரும். தூங்கலாம்... ஒரு மனுஷனா இருக்கலாம். ஆனா ஒரு போலீஸ் ஆபிஸரா செயல்பட முடியாது.., இன்னிக்கு நீ... ரெண்டு நாள் கழிச்சு விவேக்குக்கும் இதே நிலைமைதான். உங்க ரெண்டு பேரோட வாய்களை சாத்திட்டா எங்களுக்கு போதும்...''

இளங்கோ சொல்லிக் கொண்டிருக்கும்போதே விஷ்ணுவின் மூளைப் பிரதேசத்திற்குள் ஒரு இம்சையான வலி பரவ - கண்கள் மயக்கத்துக்குள் சொருகிக் கொண்டன. மைண்ட் கண்ட்ரோல் கம்ப்யூட்டர் இயங்க ஆரம்பித்தது.

அதே விநாடி-

வெளிக்கதவு வாசலில் காலிங் பெல் ஒலித்த சத்தம், அறைக்குள் வைத்திருந்த ரியாக்டர் வாங்கி எதிரொலித்தது.

சுந்தரபூபதி மனைவியைப் பார்த்தார்.

''போய்... யார்ன்னு பாரு...''

நாகரத்தினம்மாள் வெளியே வந்து - ஒரு பொத்தானை அழுத்த - கதவு இருந்த பகுதியை - மேலே இருந்து இறங்கிய வால் சீனரி பிக்சர் பூர்ணமாய் மறைத்துக் கொண்டது. நான்கைந்து அறைகளை நிதானமாய் கடந்து,

வாசலுக்கு போனவள் கதவை திறப்பதற்கு முன் கதவில் இருந்த வ்யூ ஃபைண்டரில் கண்ணை வைத்துப் பார்த்தாள்.

விவேக் - கையில் ஒரு ப்ரீப் கேஸோடு.

## 20

மெல்ல பின்வாங்கினாள் நாகரத்தினம்மாள்.

உடம்பின் நரம்புக் கிளைகளில் சின்னதாய் நடுக்கம்.

'விவேக் வீட்டிற்கு எதற்காக வரவேண்டும்...?'

'ஏதாவது ஸ்மெல் பண்ணிவிட்டானா...?'

வேகமாய் பின்வாங்கி - உள்ளே இருந்த அறைக்கு போய் இண்டர்காமைத் தொட்டாள்.

ஒரு பட்டனை அழுத்திவிட்டு - கம்ப்யூட்டர் அறையில் இருந்த கணவனிடம் பதட்டமாய் பேசினாள்.

''என்னங்க... வாசல்ல விவேக் வந்து நிக்கறான்...''

''விவேக்கா...?''

''ம்... வ்யூ ஃபைண்டர்ல பார்த்தேன்... இன்னும் கதவை தொறக்கலை...''

''டோண்ட் கெட் கன்ப்யூஸ்ட்... அவனுக்கு நம்ம விவகா

ரமெல்லாம் தெரிஞ்சிருக்க வாய்ப்பே இல்லை. குப்பையை கிளறி பார்க்கிற கோழி மாதிரி ஏதாவது இன்வெஸ்டிகேஷனுக்கு வந்திருப்பான். எதையாவது சொல்லி அனுப்பு. எக்சைட்மெண்ட் ஆயிடாதே...''

''சரி....''

ரிஸீவரை வைத்துவிட்டு - மறுபடியும் வாசலுக்கு வருவதற்குள் காலிங்பெல் நீளமாய் கதறியது.

சேலைத் தலைப்பால் பிடரியில் வழிந்த வியர்வையை ஒற்றிக்கொண்டே வேக வேகமாய் போய் கதவைத் திறந்தாள்.

போலியாய் ஆச்சர்யம் காட்டினாள்.

''ஓ... மிஸ்டர் விவேக்...! ப்ளீஸ் கம்.. கம்...''

''ஸாரி ஃபார்... த... டிஸ்டர்பன்ஸ்.''

''நோ... ப்ராப்ளம்... என் வீட்டு அட்ரஸ் உங்களுக்கு எப்படி தெரிஞ்சுது...?''

''கன்யா குருகுலத்துக்கு போனேன்... நீங்க அங்கே இல்லை... வீடு எங்கேன்னு கேட்டேன்.சொல்லி அனுப்பிச்சாங்க. ஒரு முக்கியமான விஷயமா உங்களை பார்க்க வேண்டியிருந்தது... அதான் வீட்டுக்கே வந்துட்டேன்...''

''வெல்கம். வெல்கம்...''

உதடுகள் சொன்னாலும் பிடரியில் வியர்வை.

விவேக் உள்ளே வந்து சோபாவில் உட்கார்ந்தான். நாகரத்தினம்மாளும் எதிரே வந்து உட்கார்ந்தாள். பதட்டத்தைக் காட்டிக் கொள்ளாமல் கேட்டாள்.

''ஏதோ முக்கியமான விஷயம்ன்னு சொன்னீங்க...?''

விவேக் ப்ரீப்கேஸைத் திறந்து - வீடியோ காஸட்டை எடுத்துக் கொடுத்தான்.

''உங்க காஸட்...''

''காஸெட் பார்த்தீங்களா... ஏதாவது க்ளூ பிடிபட்டதா?''

''சின்னதா ஒரு க்ளூ கிடைச்சிருக்கு...''

''என்ன...?''

''இங்கே டெக் இருக்கா...?''

''இருக்கு...''

''போட்டுப் பார்க்கலாமா...?''

''வா... வாங்க...'' வாய் உலர்ந்து போன நாகரத்தினம்மாள் விவேக்கை கூட்டிக்கொண்டு பக்கத்து அறைக்கு போய்

- அங்கிருந்த டி.வி.யையும் டெக்கையும் உயிர்க்கு கொண்டு வந்த பின் - டெக்கின் வாய்க்குள் காஸட்டைத் திணித்து - ரிமோட் கண்ட்ரோலை எடுத்து 'ஆன்' பட்டனைத் தட்டினாள்.

டி.வி. திரையில் விழா மேடைக் காட்சிகள் உற்பத்தியா யிற்று.

''மேடம்! அந்த ரிமோட் கண்ட்ரோலை என்கிட்ட குடுங்க...'' வாங்கிக் கொண்டவன் மேடை நிகழ்ச்சியில் ஒரு குறிப்பிட்ட காட்சி வந்ததும் - அதை டி.வி. திரையில் அப்ப டியே ஸ்டில் செய்தான்.

ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் முன் வரிசையில் உட் கார்ந்து பவானந்தாவையே பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

விவேக் கேட்டான்.

''மேடம்! ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் யாரைப் பார்த்துக்கிட்டிருக்காங்க தெரியுதா..?''

''பவானந்தாவை...''

''அவங்க பார்க்கிற பார்வை ஏதோ ஒரு கட்டளைக்காக காத்திட்டிருக்கிற மாதிரி உங்களுக்கு தோணலை...''

''ஆமா... எனக்கும் அப்படித்தான் தோணுது... ரெண்டு பேரும் ஏதோ ஒரு சக்திக்கு உட்பட்ட மாதிரி தெரியுது... பவானந்தா, ஜெயக்கொடி, ரத்னமாலா இந்த மூணு பேரும் ஜோதிமயானந்தா கொலையில் சம்பந்தப்பட்டிருக்கலாம்.''

விவேக் புன்னகைத்தான்.

''நானும் கூட ஆரம்பத்தில் அப்படித்தான் நினைச்சேன் மேடம்.''

''அப்படீன்னா... இப்போ...?''

''அப்படி நினைக்கலை... காரணம்... ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் பவானந்தாவைப் பார்க்கலை...''

''பி.. பி... பின்னே...?''

''பவானந்தாவுக்கு பின்புறம் ஸ்டூல் நாற்காலியில் ஒருத் தர் உட்கார்ந்துட்டிருக்கிறது தெரியுதா...? கொஞ்சம் அவுட் ஆஃப் போக்கஸ்தான். இருந்தாலும் ஆள் தெரியுது இல் லையா...?''

''ஆ.. ஆமா...''

''அ.. அது யார்ன்னு தெரியுதா...?''

''அ... அது.. அது என்னோட கணவர்...'' நாகரத்தினம் மாளுக்கு தொண்டை உலர்ந்து போயிற்று.

விவேக் தொடர்ந்தான். ''ஜெயக்கொடியும் ரத்னமாலா

வும் ஏதோ கட்டளைக்காக காத்திட்டிருக்கிற மாதிரி பார்த்துட்டு இருக்கிறது உங்க கணவரைத்தான்...''

நாகரத்தினம்மாள் வெடித்தாள்.

''வாட் நான்சென்ஸ்... யூ... ஆர்... டாக்கிங்...? அவங்க எதுக்காக என் கணவரைப் பார்க்கணும்...?''

''அவரோட கையில்தானே மைண்ட் ரிமோட் கண்ட்ரோல் இருக்கு... டி.வி. திரையில் பவனாந்தாவுக்கு பின்னாடி ஸ்டீல் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்திருக்கிற உங்க கணவரோட வலது கையை உன்னிப்பா பாருங்க... கால்குலேட்டர் மாதிரி எதுவோ தெரியலை...?''

நாகரத்தினம்மாள் பார்த்தாள்.

பவானந்தாவின் இடதுபுற விலா பக்கத்துக்கு வெளியே சுந்தரபூபதியின் கை - கலங்கலாய் நீட்டியபடி தெரிய - விரல்களில் கால்குலேட்டர் மாதிரியான அமைப்பில் - அந்த ரிமோட் கண்ட்ரோல் ஏதோ நிழல் மாதிரி தெரிந்தது.

''மேடம்...! இந்த ஸ்டில்லை போட்டோ எடுத்து அதை மேக்னம் சைஸுக்கு பெரிசுபடுத்தி - அவர் கையில் இருந்த சங்கதியை கம்ப்யூட்டர் வல்லுநர்கள் கிட்டே காட்டி அது ஒரு மைண்ட் கண்ட்ரோல் சிஸ்டத்தை சேர்ந்த 'ரிமோட் கண்ட்ரோல்'ங்கிற விபரத்தையும் தெரிஞ்சுட்டுத்தான் வந்திருக்கேன்...! உங்க கணவரை கொஞ்சம் கூப்பிடறீங்களா...?''

''நீ... நீ... நீங்க... என்ன சொல்றீங்கன்னே புரியலை..''

''புரிய வைக்கிறேன்... உங்க கணவரைக் கூப்பிடுங்க...''

''அவர் வீட்ல இல்லை...''

''எங்கே போயிருக்கார்...?''

''வெளியே...''

''இப்ப வீட்ல நீங்க மட்டும்தான் இருக்கீங்களா...?''

''ஆமா...''

''உங்க மகன் இளங்கோ கம்ப்யூட்டர் என்ஜினியரிங் படிச்ச ஒரு பி.ஜி. கிராஜுவேட் இல்லையா...?''

''ஆ... ஆமா...''

''இளங்கோ இப்ப எங்கே...?''

''அவனும் வெளியே போயிருக்கான்.''

''இவ்வளவு பெரிய வீட்ல நீங்க மட்டும்தான் இப்ப இருக்கீங்க?''

''ஆ... ஆமா...''

''வேலைக்காரங்க...?''

''இல்லை...''

''சரி... கொஞ்ச நேரத்துக்கு முந்தி - அந்த ரூம்லயிருந்து இண்டர்காம்ல யார்கூட பேசினீங்க...''

நாகரத்தினம்மாள் வெலவெலத்துப்போக - விவேக் சிரித்தான். ''நான் காலிங்பெல் கொடுத்துட்டு - கதவை திறக்க வந்தது யார்ன்னு தெரிஞ்சுக்கிறதுக்காக சாவி துவாரம் வழியா கண்ணை வெச்சு பார்த்துட்டிருந்தேன். நீங்க வந்தீங்க. என்னை வ்யூ ஃபைண்டர்ல பார்த்துட்டு - மெல்ல பின் வாங்கி மறுபடியும் உள்ளே போனீங்க... அந்த அறைக்குள்ளே நுழைஞ்சு - ஒரு பட்டனை மட்டும் தட்டி யார்கூடவோ பேசினீங்க... சரியா...? உங்க வீட்டுக் கதவுக்கு கொஞ்சம் பெரிய சாவி துவாரம்... நன்றி...''

நாகரத்தினம்மாள் நெற்றியில் வைத்திருந்த குங்குமம் உடனே வியர்வையில் இளகியது.

விவேக் தலையைச் சாய்த்து புன்னகைத்தான்.

''ம்... சொல்லுங்க மேடம்... இண்டர்காம்ல யார் கூட பேசினீங்க... இனிமே நீங்களோ... உங்க கணவரோ... ஜோதி மயானந்தா கொலை கேஸில் சம்பந்தப்பட்டவங்க யாராக இருந்தாலும் சரி... தப்பிக்க முடியாது... உங்க வீட்டை அங்கு லம் அங்குலமா சோதனை போட சின்னதா ஒரு போலீஸ் ஸ்க்வார்ட் தெருமுனை வேன்ல காத்திட்டிருக்கு... உண் மையை நீங்களே சொல்லிட்டீங்கன்னா கௌரவமான முறை யில் நடத்துவோம்... இல்லேன்னா கந்தல் துணி மாதிரி ஆயிடு வீங்க...''

சொன்ன விவேக் - பாண்ட் பாக்கெட்டில் இருந்த தீப் பெட்டி சைஸ் வயர்லஸ்ஸை எடுத்து - ஏரியலை நீட்டிவிட்டு பேசினான்.

''கம் ஃபார் சர்ச் ஆபரேஷன்...''

அடுத்த சில விநாடிகளில் வேன் அலறிக்கொண்டு வர நாகரத்தின அம்மாள் கையெடுத்து கும்பிட்டாள்.

''எல்லாத்தையும் சொல்லிடறேன்...''

# 21

''சொல்லுங்க... அப்புறம்...?'' - ரூபலா நாற்கா லியில் உட்கார்ந்து தன் தாடையை தாங்கிக் கொண்டு கேட்க - விவேக் ஒரு வாய் டீயை உறிஞ்சிவிட்டு தொடர்ந்தான்.

''விஞ்ஞானம் வளர வளர மனுஷங்களுக்கு இப்படித் தான் புத்தி போகும் போலிருக்கு... கம்ப்யூட்டர் ஒரு அற்புத மான விஷயம். அதை அழிவு எண்ணங்களுக்கு உபயோகப்ப டுத்தினா இப்படித்தான். வேண்டாத பிடிக்காத உலக நாட்டுத்

தலைவர்களை கொலை செய்யறதுக்காக மனித மூளையையும் கம்ப்யூட்டரையும் இணைத்து மைண்ட் கண்ட்ரோல் அண்ட் அட்டாக் சிஸ்டத்தை நாகரத்தினம்மாளின் கணவர் சுந்தரபூபதியும் மகன் இளங்கோவும் கண்டுபிடிச்சு அதை ரிகர்சல் பண்ணி பார்த்திருக்காங்க.. அதுக்கு ஜோதிமயானந்தா பலியாகியிருக்கார்...''

''ரிகர்சலா...?''

''ஆமா... இந்த மைண்ட் கண்ட்ரோல் அட்டாக் சிஸ்டம் ஃபார்முலாவை - வெளிநாட்டு சதிக்கும்பலுக்கு விக்க - ஒரு பெரிய தொகைக்கு பேரம் முடிவாகியிருக்கு. பணம் கைக்கு வர்றதுக்கு முந்தி - அந்த சிஸ்டத்தை வெற்றிகரமாய் நடத்தி காட்ட வேண்டிய கட்டாயம் அப்பாவுக்கும் மகனுக்கும். யோசிச்சாங்க. கடைசியில் கன்யா குருகுலத்துக்கு - வர இருந்த ஜோதிமயானந்தாவை குறி வெச்சாங்க. மைண்ட் கண்ட்ரோல் அண்ட் அட்டாக் சிஸ்டத்தை குருகுலத்தைச் சேர்ந்த ரெண்டு பெண்கள் மூலமாவே வெற்றிகரமா நடத்திக் காட்ட தீர்மானம் பண்ணினாங்க... நாகரத்தின அம்மாள் ஆரம்பத்துல இதுக்கு எதிர்ப்பு தெரிவிச்சாலும் கிடைக்கப் போகிற லட்சக்கணக்கான டாலர்களுக்கு ஆசைப்பட்டு ஒத்துகிட்டா...''

விவேக் நிறுத்தி ஒரு வாய் டீயை விழுங்கிவிட்டு தொடர்ந்தான். ''ஜோதிமயானந்தாவை தீர்த்துக்கட்டற வேலையை யார் மேல சுமத்தறது...? கன்னியா குருகுலத்தில் எந்த விழா நடந்தாலும் கடவுள் வணக்கப் பாட்டைபாடற ஜெயக்கொடியையும் ரத்னமாலாவையும்செலக்ட் பண்ணி ரெண்டு பேரையும் வீட்டுக்கு தந்திரமா கூட்டிட்டு போய் - மைண்ட் கண்ட்ரோல் கம்ப்யூட்டர் மூலமா... அவங்க மூளைப்பகுதியை - ரிமோட் கண்ட்ரோலுக்கு கீழ்ப்படியற மாதிரி - சலவை பண்ணியிருக்காங்க...''

ரூபலா பிரமித்தாள்.

''இதெல்லாம் சாத்தியம்தானா...?''

''சாத்தியம்தான். நம்ம கையில ரிமோட் கண்ட்ரோல் இருந்தா டி.வி. சானல் பூராவும் நாம சொன்னபடி கேட்கறதில்லையா? அதே மாதிரிதான். ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் டி.வி. பெட்டிகள் மாதிரி செயல்பட்டு இருக்காங்க... பவானந்தாவுக்கு பின் சீட்ல உட்கார்ந்துட்டிருந்த சுந்தரபூபதி தன் கையில் இருந்த ரிமோட் கண்ட்ரோல் மூலமா - கம்ப்யூட்டரால் சலவை செய்யப்பட்ட ஜெயக்கொடியையும் ரத்னமாலாவையும் இயக்கியிருக்கார்.''

''அப்படீன்னா... ஜெயக்கொடி, ரத்னமாலா ரெண்டு பேர் மார்பு பகுதிக்குள்ளே துப்பாக்கிகளை மறைச்சு வெச்சது.. சுந்தரபூபதி க்ரூப்தான்...''

''ஆமாம்... அதுக்குப் பின்னாடி எல்லாமே கட்டளைகள் தான். கடவுள் வாழ்த்து பாடிகிட்டு இருக்கும்போதே - சுந்தர பூபதி - ரிமோட் கண்ட்ரோல் சிஸ்டத்தில் இருக்கிற 'பாட்டை நிறுத்து' என்கிற பட்டனை அழுத்துவார். உடனே பாடுவதை நிறுத்துவார்கள். அடுத்து 'திரும்பு' - திரும்புவார்கள். 'துப் பாக்கியை எடு' - எடுப்பார்கள். 'ஜோதிமயானந்தாவை சுடு' - சுடுவார்கள். மைக்கை பிடி. பிடிப்பார்கள். 'ஏன் கொலை செய்தேன் காரணத்தை சொல்' - ஏற்கெனவே சொல்லிக் கொடுத்த காரணத்தை சொல்வார்கள். நெற்றியில் துப்பாக் கியை பதித்துக் கொண்டு தற்கொலை செய்துகொள் - கட்ட ளைகளில் நிறைவேறாமல் போனது கடைசி கட்டளை மட் டும்தான்.''

ரூபலா கண்களை விரிய வைத்துக்கொண்டு அகலமாய் ஆச்சர்யப்பட விவேக் தொடர்ந்தான்.

''ஜெயக்கொடிக்கும் ரத்னமாலாவுக்கும் நாம் மூளைச் சலவை செய்யப்பட்டிருக்கிறோம் என்கிற விஷயம் இதுவ ரைக்கும் தெரியாது... அந்த அளவுக்கு சுந்தரபூபதி க்ரூப் செயல்பட்டிருக்கிறது... விஷ்ணுவுக்கு செய்யப்பட இருந்த சிகிச்சை வேறு. இது வேறு.''

''எனக்கு இருக்கிற இன்னொரு சந்தேகம் இதுதான்.''

''என்ன...?''

''வீடியோ காஸட்ல... ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் பவானந்தாவை பார்க்கலை... அவர்க்குப் பின்னாடி இருக்கிற சுந்தர பூபதியைத்தான் பார்த்திருப்பாங்க என்கிற விஷயம் உங்களுக்கு எப்படி தெரிஞ்சது...?''

''அ... அது... அது... வந்து...''

''சொல்லுங்க...''

''அது உத்யோக ரகசியம்...''

''இந்த பிகுதானே வேண்டாங்கிறது...''

''அது ராஜரகசியம் மாதிரி... சொல்லக்கூடாது...''

''சொல்லுப்பா... என் கண்ணில்ல...''

''சொல்றேன். அதுக்கு முன்னாடி...''

''அதுக்கு முன்னாடி...''

''என் ஐம்புலன்களுக்கும் தலா ஒரு முத்தம் குடுக்க ணும்....''

''சரி.. தர்றேன்...''

''தா...''

தந்தான்.

கண், காது, மூக்கு, உதடு, நெற்றி.

''ஆஹா... ஆஹா...''

''இப்ப சொல்லுங்க...''

''உன் சந்தேகம் என்ன...?''

''வீடியோ காஸட்ல ஜெயக்கொடியும் ரத்னமாலாவும் பவானந்தாவை பார்க்கலை. அவர்க்குப் பின்னாடி இருக்கிற சுந்தரபூபதியைத்தான் பார்த்திருப்பாங்கங்கிற விஷயம் உங்களுக்கு எப்படி தெரிஞ்சது...?''

''அதுக்கு நீ ஒரு காரியம் பண்ணனும்.''

''என்ன...?''

''இந்த நாவலோட பதினெட்டாவது அத்தியாயத்தோட வால் பகுதியில் ரெண்டு போலீஸ் ஆபீஸர்ஸ் பேசிக்கிறதை மறுபடியும் படிக்கணும்.''

ரூபலா பதினெட்டாவது அத்தியாயத்துக்கு ஓட-

டெலிபோன் அடித்தது.

விவேக் ரிஸீவரை எடுத்தான்.

''ஹலோ...''

மறுமுனையில் டாக்டர் பேசினார்.

''மிஸ்டர் விவேக்...! நவ் விஷ்ணு ஈஸ் ஆல்ரைட். ரத்தத்தில் கலந்திருந்த அந்த இஞ்செக்ஷன் மருந்தை பிரிச்சுட்டோம்... ரெண்டு நாள் ரெஸ்ட் எடுத்தா போதும்... ஹி வில் பி ஆல்ரைட்.... கவலைப்பட எதுவும் இல்லை...''

''தாங்க்யூ டாக்டர்...''

— முற்றும் —